5th February 1959]

**Sri K. ANBAZHAGAN** : தஞ்சாவூர் மாவட்டத்திலிருக்கும் காவேரிப் பூம்பட்டிணத்தை விரிவு படுத்தி அல்லது அந்த பகுதியை அழகுபடுத்தி ஒரு ஓய்வு விடுதி கட்டப்படும் என்று அண்மையில் தெரிவிக்கப்பட்டது. அது நிறைவேறுமா ? அதுபோல் மதுரை ஜில்லாவில் இருக்கும் சுருளி மலையிலும் ஒரு பிரயாணிகள் விடுதி அமைப்பதற்கு அரசாங்கத்திடம் திட்டம் உண்டா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : சுருளிமலையில் இப்பொழுது சில வேலைகள் நடந்துவருகின்றன. காவேரிப்பூம்பட்டிணத்தைப்பற்றி யோசித்துப்பார்க்கவேண்டும். வெளிநாட்டிலிருந்து வருபவர்களுக்கு மட்டும் தான் தங்குவதற்கு இப்பொழுது ஏற்பாடு செய்யப்பட்டுவருகிறது.

*Lands in Lower Bhavani areas affected by seepage*

* 17 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of acres declared as seepage affected in Lower Bhavani area of Coimbatore district during 1958 ;

(*b*) whether any conditions were laid to declare seepage-affected areas; and

(*c*) if so, the details of the same?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : (*a*) 21,121·88 acres.

(*b*) & (*c*) Yes, Sir. A statement * is placed on the table of the House.

*Minimum Wages*

* 18 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஜின்னிங்—அச்சு—ஓட்டல்—தீப்பெட்டி தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்தாகிவிட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன் விவரம் மேஜைமேல் வைக்கப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (அ) & (ஆ) இந்தத் தொழில் களுக்குக் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யவில்லை.

**Sri V. K. KOTHANDARAMAN** : குறிப்பிட்ட தொழிலாளர்களின் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் எப்பொழுது செய்வார்கள் ? தீப்பெட்டித் தொழிலாளர்களுக்கும், முதலாளிகளுக்கும் ஆங்காங்கே தகராறுகள் ஏற் பட்டிருப்பதற்குக் காரணம், குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யப்படாதது தான். ஆகவே இந்த குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இப்பொழுது தீப்பெட்டித் தொழில்கள் மிகவும் நெருக்கடியான நிலைமையில் இருக்கின்றன. இந்த சமயத்தில் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்தால் அந்தத் தொழில் நசித்துப்போகும். அதனால்தான் இந்த குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்வது சற்று தாமதம் ஆகிறது.

---

* Printed as Appendix I on page 80 infra.

[5th February 1959

* 19 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to enhance the minimum wages of municipal workers; and

(*b*) if so, the details thereof?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

Sri N. K. PALANISAMI : பல முனிசிபாலிடிகளில் குறைந்தபட்ச கூலி (basic wage) ரூபாய் 10 ஆக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பம்பாயில் ரூபாய் 18 ஆகவும், மைசூரில் ரூபாய் 16 ஆகவும் நிர்ணயித்திருக்கிறார்கள். ஆகவே குறைந்தபட்ச ஊதியத்தை உயர்த்துவதற்கு இந்த மாகாணத்தில் எப்பொழுது நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள் ?

The Hon. Sri R. VENKATARAMAN : 1952-ம் வருஷத்தில் முதல் முதலாக ஸ்தல ஸ்தாபனங்களில் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யப்பட்டது. ஐந்து வருஷத்திற்கு ஒரு முறை இந்த கூலி நிர்ணயம் செய்யப்பட்டு வருகிறது. அதன்படி 1957-ம் வருஷத்தில் குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்கப்பட்டது. அடுத்தபடியாக 1962-ம் வருஷத்தில் எடுத்துக் கொள்ளப்படும். ஆகவே அதற்கு இப்பொழுது ஒன்றும் அவசியம் இல்லை.

Sri M. KALYANASUNDARAM : நேற்று கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையில் கமிஷன் செய்யும் சிபார்சு ஸ்தல ஸ்தாபன ஊழியர்களுக்கும் பொருந்தும் என்று சொல்லப்பட்டது. ஆனால் கனம் மந்திரி அவர்கள் பொருந்தாது என்று சொல்வதற்கு காரணம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : நான் அப்படி ஒன்றும் சொல்லவில்லை.

* 20 *Q.*—Sri M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any suggestion has been received from the Central Board for Salt for bringing salt workers within the scope of the Minimum Wages Act; and

(*b*) if so, the action taken thereon?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The Government decided to defer the question of extending the Minimum Wages Act to the salt industry as the existing staff of the Factories Department cannot take up any additional work at present.

Sri M. S. SELVARAJAN : குறைந்தபட்ச கூலி நிர்ணயம் தற்காலிகமாக நிறுத்திவைத்திருக்கும் நிலையில் இப்பிரச்னையில் ஒரு பரிகாரம் காணுவதற்கு வசதியாக உப்புத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களும்

சர்விஸ் கண்டிஷன், கூலி நிர்ணயம் போன்ற விஷயமாக கவனிப்பதற்கு ஒரு கமிட்டி நிறுவிப் பரிசீலிப்பதற்கு அரசாங்கம் கவனம் செலுத்துவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது எவ்விதமான பரிசீலனையும் இல்லை. பின்பு அவசியம் ஏற்பட்டால் ஒரு கமிட்டி ஏற்படுத்த யோசிக்கப்படும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Are the Government aware of the fact that in many factories workers themselves have taken to the manufacture of salt and if so, how they proposed to enforce this Act?

THE HON. SRI R. VENKATARAMAN : In fact there are some co-operative societies of salt workers in the State and they are paying fairly adequate wages. So the question of minimum wages does not arise in their case.

*Parks at Dam-sites*

*21 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்திலுள்ள ஆறுகளின் அணைக்கட்டுகளுக்கு அருகே பூங்காக்கள், நீரூற்றுகள் கட்டும் உத்தேசமுண்டா ?

(ஆ) அப்படியானால் எங்கெங்கே ? என்ன செலவில் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The Government have approved the formation of parks at the following places at the cost shown against each :—

| | RS. |
|---|---|
| (1) Lower Bhavani (Park) ... ... | 1,80,000 |
| (2) Amaravathi Reservoir Project at Amaravathinagar (Park) ... ... | 1,00,000 |
| (3) Krishnagiri Reservoir 2Project Dam-site (Park) ... ... ... | 52,000 |

The Government have under consideration the improvements to the park in the rear of Mettur Dam at a cost of Rs. 2,49,600 and a proposal for the formation of parks and fountains at the Sathanur reservoir dam-site at an estimated cost of Rs. 1,00,000.

Besides the above, the formation of parks and springs at the following places at the cost shown against each is under the consideration of the Chief Engineer (Irrigation) :—

| | RS. |
|---|---|
| (1) Grant Anicut (Garden and Fountain) .. .. | 12,000 |
| (2) Cauvery Upper Anicut (Garden and Fountain). | 5,250 |
| (3) Veeranam tank and Shatiatope Anicut (Gardens) .. .. .. .. .. | 5,000 at each place. |
| (4) Poondi Regulator Area (Parks and Fountains). | 16 000 |

The work on the formation of a park at the Vaigai Dam-site has been taken up.

[5th February 1959

SRI A. VEDARATHNAM : இப்போது குறிப்பிடப்பட்ட இந்த அணைக் கட்டுகள் தவிர மற்ற புதிய அணைக்கட்டுகளிலும் இத்தகைய பூங்காக்களை அமைக்க அரசாங்கம் உத்தேசிக்குமா ? அவ்வாறு செய்ய அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : புதிய அணைக்கட்டுகள் கட்டப்பட்ட பிறகு அது பற்றி யோசிக்கப்படும்.

*Veterinary Hospitals*

*22 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லாவில் எத்தனை, என்னென்ன விதமான கால் நடை ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன (தாலூகாவாரியாக) ?

(ஆ) ஒவ்வொரு ஆஸ்பத்திரியும் எந்தெந்தத் தேதியில் ஆரம்பிக்கப் பட்டது ?

(இ) 1955 முதல் 1957 வரை வருட வாரியாக எத்தனைப் பிராணி களுக்கு வைத்திய சிகிச்சை கொடுக்கப்பட்டது ?

(ஈ) பிர்க்காவுக்கு ஒரு கால்நடை ஆஸ்பத்திரி ஏற்படுத்த உத்தேச முண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) to (c) A statement[a] is placed on the table of the House.

(d) At present there is no proposal to start one veterinary dispensary for each firka.

SRI V. K. KOTHANDARAMAN : மேஜையில் வைக்கப்பட்டிருக்கும் ஸ்டேட்மெண்டில், 3 தாலூகாக்களில் கால் நடை ஆஸ்பத்திரி களும், 5 தாலூகாக்களில் கால்நடை டிஸ்பென்ஸரிகளும், மற்ற தாலூ காக்களில் மைனர் கால்நடை டிஸ்பென்ஸரிகளும் இருப்பதாகக் குறிப் பிடப்பட்டிருக்கிறது. இன்றுள்ள நிலைமையில் கால்நடைகளுக்கு போது மான பாதுகாப்பு இருக்க வேண்டுமானால் ஒவ்வொரு தாலூகாவிற்கும் ஒரு கால்நடை ஆஸ்பத்திரியும் ஒவ்வொரு பிர்க்காவிற்கும் ஒரு கால்நடை டிஸ்பென்ஸரியும் இருக்கவேண்டும் என்று கருதி, கால்நடை ஆஸ்பத்திரி களையும் கால் நடை டிஸ்பென்ஸரிகளையும் அந்த முறையில் அமைப்ப தற்கு அரசாங்கத்தார் உடனடியாக முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 102 தாலூகாக் கள் இருக்கின்றன. 112 ஒழுங்கான வெடெரினரி ஸ்தாபனங்களும் இருக் கின்றன. மற்றவை மைனர் டிஸ்பென்ஸரிகள். ஆனால் பிர்க்காவிற்கு ஒரு வெடரினரி வைத்திய ஸ்தாபனம் வீதம் அவைகளை அமைப்பது சிரமம்; ஒவ்வொரு தாலூகாவிற்கும் ஒன்று நிச்சயமாக இருக்கும்.

SRI A. A. RASHEED : What is the number of hospitals in North Arcot district without veterinary doctors and may I know when the doctors will be appointed ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information, Sir.

---

a Printed as Appendix II on pages 91–92 infra.

5th February 1959]

SRI A. VEDARATHNAM : இப்போது, இதுவரை திறக்கப் பட்டிருக்கும் அத்தனை கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக் கிறார்களா ? அப்படி இல்லையானால், டாக்டர்கள் இல்லாத ஆஸ்பத்திரி களுக்கெல்லாம் டாக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அனேகமாக எல்லா கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒன்றி ரண்டு இடங்களில் போதுமான டாக்டர்கள் கிடைக்காமல் இருக்கலாம். டாக்டர்கள் பற்றுக்குறை இருக்கிறது. இதை சமாளிப்பதற்கு " ஸ்டாக் மென் " இருக்கவேண்டும்.

SRI M. K. SOMASUNDARAM : கால்நடை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்ற பிரச்னை பெருவாரியாக இன்னும் இருந்து வருகிறது. எனவே, உத்தியோகத்தை விட்டுவிட்டு வெளியேறும் டாக்டர்களை கட்டாயமாக இந்த ஆஸ்பத்திரிகளில் நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கால்நடை டாக் டர்களின் நிலைமை மனிதர்களுக்கு வைத்தியம் பார்க்கும் டாக்டர்களின் நிலைமையைப் போன்றது அல்ல. கால்நடை டாக்டர்களுக்கான பரீக்ஷை பாஸ் பண்ணினவர்கள் இந்த ஸ்தாபனங்களில் வேலைக்கு வந்துதான் ஆகவேண்டும். அவர்களுக்கு தனியாக உத்தியோகம் கிடைப்பதில்லை. வேண்டுமானால், அவர்கள் வேறு ராஜ்யங்களுக்குப் போகலாம். கிடைக்கும் கால்நடை டாக்டர்களைக் கொண்டு இந்த ஆஸ்பத்திரிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

*23 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

S.P.C.A. உள்ள இடங்களிலெல்லாம் கால்நடை ஆஸ்பத்திரிகள் வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Regular veterinary institutions (either veterinary hospital or veterinary dispensary) are functioning already at all places where S.P.C.A. are functioning, except Ayyampet. The veterinary dispensary at Papanasam which is only at a distance of five miles serves the needs of Ayyampet.

SRI M. KALYANASUNDARAM : : மாடுகள் வைத்துக் கொண் டிருக்கும் விவசாயிகளுக்கு S. P. C. A. ஸ்தாபனத்தால் நன்மையை விடத்தீமைதான் அதிகமாக ஏற்படுகிறது என்பதை சர்க்கார் அறிவார் களா ? அந்தக் காரணத்தால் இந்த ஸ்தாபனத்தை சர்க்கார் மூடு வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தி னரைப் போன்ற ஒரு சிலர் இம்மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருக் கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அது சரி அல்ல.

*Hindi*

*24 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாநில ஆரம்பப் பள்ளிகளில் ஹிந்தி எந்த வகுப்பிலிருந்து போதிக்கப்படும் ?

(ஆ) எல்லா மாணவர்களுக்கும் போதிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Hindi will not be taught in any of the standards in elementary schools.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : ஆரம்பப் பள்ளிகளில் ஆங்கிலம் போதிக்கப்பட இருக்கிறது. ஆங்கிலத்திற்குக் கொடுத்திருக்கும் அந்தஅளவு சலுகையையாவது நம் தேசிய மொழியாகிய ஹிந்திக்குக் கொடுக்க அரசாங்கம் முன் வருமா ? அதைப் பற்றி அரசாங்கம் ஆலோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மொழிப் பிரச்னை சம்பந்தமாக எல்லோரும் கலந்தாலோசித்து ஒரு திட்டத்தை வகுத்திருக்கிறோம். அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவது தான் அரசாங்கத்தின் கொள்கை.

*Allotment of poramboke lands to Harijans*

*25 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri M. C. Muthukumaraswamy) : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலூக்காவில் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கியுள்ள ரெவின்யூ புறம்போக்கு நிலங்களின் விஸ்தீர்ணம் என்ன ?

(ஆ) அவைகளில் ஹரிஜனங்களின் உபயோகத்திலுள்ள நிலங்களின் விஸ்தீரணம் எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No cultivable poramboke land has been reserved for the Harijans but an extent of 9·61 acres of Natham poramboke has been reserved for the provision of house-sites to the Harijans.

(*b*) Out of an extent of 9·61 acres of Natham poramboke an extent of 5·54 acres of land is under the occupation of the Harijans.

SRI K. B. S. MANI : தஞ்சாவூர் ஜில்லாவில் குடியிருப்புப் பிரச்னை மிக நெருக்கடியான நிலையில் இருப்பதற்குக் காரணம், அந்த ஜில்லாவில் எல்லா நிலங்களும் மடாலயங்களுக்கே சொந்தமாக இருப்பது தான். எனவே அங்கே சர்க்கார் புறம்போக்கு நிலங்களில் ஹரிஜனங்கள் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு எவ்விதத் தடையும் இல்லாதபடி முன் கூட்டியே ஒரு உத்தரவு போட சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சர்க்கார், தங்களுக்குச் சொந்தமான நிலங்கள் உள்ள இடங்களில் அவைகளை ஹரிஜனங்களுக்கு தாராளமாகத்தான் கொடுக்கிறார்கள். அவை போதிய அளவில் இல்லை. ஆகையால் நிலங்களை acquire செய்து ஹரிஜனங்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அவ்வாறு acquire செய்யப் பட்டுள்ள இடங்களுக்குச் செல்ல ஹரிஜனங்கள் மறுக்கிறார்கள்.

SRI K. B. S. MANI : அது வாஸ்தவமே. ஹரிஜனங்கள் அந்த இடங்களுக்குப் போகாததற்குக் காரணம் அந்த இடங்கள் பள்ளங்களிலோ ஆற்றுப் படுகைகளிலோ இருப்பது தான்; acquire பண்ணப்பட்டுள்ள இடங்கள் மிக மோசமாகவும் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு ஏற்றவையாக இல்லாமலும் இருக்கின்றன. இந்தக் காரணங்களால் தான் அவர்கள் அந்த இடங்களுக்குப் போகவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அந்த இடங்கள் ஜில்லா அமீர்களால் பார்வையிடப்பட்டு இந்த விஷயங்கள் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றனவா ? அப்படியானால் அவைகளை ரத்து செய்துவிட்டு வேறு இடங்களை acquire செய்து ஹரிஜனங்களுக்குக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எதோ சில இடங்களில் கனம் அங்கத்தினர் சொல்வதுபோல் இருக்கலாம். ஆனால் பெரும்பான்மையாக, தாங்கள் இருக்கும் இடங்களை விட்டு வேறு இடங்களுக்குப் போகும் மனப்பான்மை—தாங்கள் இருக்கும் இடங்கள் நெருக்கடியாக இருந்தால்கூட—அவர்களிடம் இல்லை.

### *Appointment to the Ministerial Service*

*26 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of SRI M. C. Muthukumaraswamy) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மினிஸ்டீரியல் ஸெர்விஸில் தாற்காலிக, நிரந்தர வேலைகளுக்கு அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் வகுப்புவாரித் தேர்வு முறை இல்லா வேலை தேடித்தரும் ஸ்தாபனங்களால் பின்பற்றப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No Sir.

### *Preparation of medicines by Devasthanams*

*27 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of SRI M. C. Muthukumaraswamy) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அறநிலையப் பாதுகாப்புக்கு உட்பட்ட எத்தனை தேவஸ்தானங்களிலிருந்து ஆயுர்வேதிக் முறைப்படி உயர்ந்த மருந்துகள் தயாரித்து ஏழைகளுக்கு இலவசமாகக் கொடுக்க அனுமதி வேண்டுமென அரசாங்கத்திற்கு முறையீடு வந்துள்ளன ?

(ஆ) அவைகளில் எத்தனை தேவஸ்தானங்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டுள்ளன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) None, Sir.

(*b*) Does not arise.

SRI K. B. S. MANI : தேவாலய தர்மகர்த்தாக்கள், இந்த மருந்துகள் என்னென்ன பலன்கள் எவ்வளவு எவ்வளவு அளிக்கின்றன என்று பரீட்சித்துப் பார்த்த பிறகு அவைகளை வெளியே அனுப்புகிறார்களா, அல்லது பரீட்சிக்காமலே மக்களுக்குக் கொடுத்து மக்களிடத்தில் அவைகளைப் பரீட்சிக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆயுர்வேத முறைப்படி மருந்து தயாரித்து மக்களுக்குக் கொடுக்க எத்தனை தேவஸ்தானங்கள் முன் வந்திருக்கின்றன என்று மூலக் கேள்வியில் கேட்கப்பட்டது. அதற்கு, "ஒரு தேவஸ்தானமும் முன் வரவில்லை" என்று நான் பதில் சொன்னேன்.

### *Polytechnics*

*28 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total number of Polytechnics in the State, district-war;

(*b*) the total number of students studying in all the polytechnics; and

(*c*) the number of students studying in each polytechnic?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) A statement [a] is laid on the table of the House.

[a] Printed as Appendix III on pages 93 94 infra.

[5th February 1959

SRI T. T. DANIEL : Sir, because there has been a great rush to get admissions in these institutions, will the Government consider the desirability of starting some more polytechnics and is it a fact that some applications are pending in this regard before the Government?

THE HON. SRI C. SUBRAMANIAM : Government intend to start a few more polytechnics and in fact there are some applications pending.

SRI V. K. KOTHANDARAMAN : தென் ஆற்காடு, வட ஆர்காடு, கன்னியாகுமரி ஆகிய மூன்று ஜில்லாக்களில் தவிர மற்ற ஜில்லாக்களில் மட்டிலும் தொழிற் பள்ளிகள் இருக்கின்றதென்று மேஜையில் வைக்கப்பட்டுள்ள ஸ்டேட்மெண்டிலிருந்து தெரிகிறது. இந்த மூன்று ஜில்லாக்களிலும் உடனடியாக இந்த ஆண்டில் தொழிற்பள்ளிகளை ஆரம்பிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தென் ஆற்காடில் பாலிடெக்னிக் இருக்கிறது. வட ஆற்காட்டிலும் கன்னியாகுமரியிலும் பாலிடெக்னிக் இல்லை. இந்த இரண்டு ஜில்லாக்களிலும் அடுத்த வருஷம் தொழிற்பள்ளிகளை ஆரம்பிக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

### *Village officers*

*29 Q.—SRI C. MUTHIAH : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

கிராம உத்தியோகஸ்தர்களின் பதவிகளுக்கு சர்விஸ் கமிஷன் மூலம் நபர்களைத் தேர்ந்தெடுக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI C. MUTHIAH : இப்போது கிராம உத்தியோகஸ்தர்கள் இரு முறையில் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களை நியமிக்கும் விஷயத்தில் சர்க்கார் இரு கொள்கையை கையாள்கிறது. இசும் பாத்தியம், இசுமில்லாத பாத்தியம் என்ற இரு முறையில் அவர்கள் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களை சர்விஸ் கமிஷன் மூலம் நியமிக்க விட்டாலும், ஒரே முறையில் அவர்களை நியமிக்கும் வகையில் தங்கள் கொள்கையை மாற்றிக்கொள்ள அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M A MANICKAVELU : சட்டப் பிரகாரம் இசும் பாத்தியம் இருக்கிறது. இந்தப் பிரச்னை ஒரு பெரிய பிரச்னை. இது அரசாங்கத்தின் ஆலோசனையில் இருக்கிறது.

SRI K. B S MANI : கிராம உத்தியோகஸ்தர்களை நியமிக்கும் விஷயத்தில் பரம்பரை பாத்தியதை முறை தஞ்சாவூர் ஜில்லாவில் இல்லை. அந்த முறை தென் ஆற்காடு ஜில்லாவில் இருக்கிறது. பல கொலைகளும், கொள்ளைகளும், கலவரங்களும் கிராமங்களில் நடப்பதற்கு பரம்பரை பாத்தியதை முறை ஏதுவாக இருக்கிறது. ஆகையால் இந்த முறையை நீக்குவதற்கு ஒரு அவசரச் சட்டத்தைக் கொண்டுவர அரசாங்கம் முன் வருமா ?

SRI A. GOVINDASAMY : I take strong objection to the words 'Kolai' and "Kollai" சில இடங்களில் இந்த முறையால் கொலை, கொள்ளைகள் நடக்கின்றன என்று கனம் அங்கத்தினர் சொல்கிறார்.

THE HON. SRI M. A MANICKAVELU : இதனால் கொலைகளும் கொள்ளைகளும் நடப்பதாக எனக்குத் தெரியவில்லை.

5th February 1959]

SRI A. R. SUBBIAH MUDALIAR : கிராம உத்தியோகஸ்தர்களை நியமிக்கும் விஷயத்தில் பரம்பரை பாத்தியதையை எடுத்துவிட வேண்டுமென்று சர்க்கார் ஆலோசித்து வருகிறதா ? அப்படியானால் எப்பொழுது அது அமுல் நடத்தப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பரம்பரை பாத்தியதையைப் பற்றி மட்டுமன்றி, பொதுவாகவே கிராம உத்தியோகஸ்தர்களை வேறு எந்த முறையில் நியமிக்கலாம் என்பது பற்றியும் ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது.

*Retirement age for industrial workers*

* 30 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state the superannuation age fixed for clerks and industrial workers by the Standing Labour Committee?

THE HON. SRI R. VENKATARAMAN : No superannuation age has been fixed for clerks by the Standing Labour Committee.

In the old Standing Orders of some establishments certified under the Industrial Employment (Standing Orders) Act, prior to 17th September 1956, the age of superannuation for industrial workers was fixed at 55 years. In the Standing Orders of certain textile mills and industrial establishments certified after 17th September 1956, the age is fixed at 58 years. In an agreement, dated 15th April 1957, between the United Planters' Association of Southern India, Coonoor, and the plantation workers, the age of superannuation for the plantation workers has been fixed at sixty.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister be pleased to state the principles that have been followed in fixing this age limit?

THE HON. SRI R. VENKATARAMAN : This is a matter for negotiation between the employers and the employees, and the Industrial Employment (Standing Orders) Act provides for the determination of any differences between the employers and the employees in this matter.

SRI S. LAZAR : இப்பொழுது அதிகப்படுத்தப்பட்டிருக்கிறவயது 60. இதற்கு retrospective effect கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்தமாதிரி அதிகப் படுத்தவில்லை. மூன்று ஒப்பந்தங்களை நான் படித்தேன். ஒரு ஒப்பந்தத் தில், தோட்டத் தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ஏற் பட்ட ஒப்பந்தத்தில் 60 வயது என்று கண்டிருக்கிறது. அவ்வளவுதான்.

SRI S. PAKKIRISAMI PILLAI : உடல் உழைப்பு கொடுத்து வேலை செய்யக் கூடியவர்களுக்கு, வேலையிலிருந்து நீக்கப்பட்ட பிறகு பென்ஷன் இல்லாத காரணத்தினால், அவர்களுக்கு உடலில் வலு இருக்கும் வரையில் வேலை செய்வதற்கு ஒத்தாசை செய்ய, ரிடையர்

ஆகவேண்டுமென்று சொன்னால் மெடிக்கல் காரணத்தினால்தான் ரிடையர் ஆக்கவேண்டுமென்ற சிபார்சை "ஸ்டாண்டிங் லேபர் கமிட்டிக்கு" இந்த அரசாங்கம் சொல்லுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப்பற்றி இரண்டு விதமான அபிப்பிராயங்கள் இருக்கின்றன. வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக் கொள்ளும் வயதை அதிகரிப்பதினால் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும் என்ற பிரச்னையும் உண்டு. ஆகவே இதைப் பற்றி முதலாளிகளும் தொழிலாளர்களும் நேரிடையாகப் பேசி அவர்கள் ஒப்பந்தத்திற்கு வர வேண்டுமென்று விட்டிருக்கிறோம். அவர்கள் அப்படி ஒப்பந்தத்திற்கு வர முடியாவிட்டால் அவர்கள் லேபர் கமிஷனரிடம் சென்று தங்கள் குறையைத் தீர்த்துக் கொள்ள முடியும்.

*Police force to prevent illicit transport of liquor*

* 31 *Q*.—SRI K. B. S. MANI (on behalf of M. C. Muthukumaraswamy): கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, நன்னிலம், நாகப்பட்டிணம், மாயூரம் முதலிய தாலூகாக்களை ஒட்டியுள்ள காரைக்கால் பிரஞ்சு பகுதியில் மதுவருந்த செல்பவர்களையும், மதுவைக் கள்ளக்கடத்தல் செய்பவர்களையும் தடுப்பதற்கெனத் தனிப் போலீஸ் நிறுவுவதற்கு அரசாங்கம் திட்டமிட்டுள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI K. PONNIAN : மதுவிலக்கு அமுலில் இருக்கும் ராஜ்யத்திற்கும் மதுவிலக்கு அமுலில் இல்லாத ராஜ்யத்திற்கும் இடையேயுள்ள தூரம் என்ன ? எவ்வளவு மைல்களுக்கு அப்பால் மதுவிலக்கு அமுலில் இருக்கும் ராஜ்யத்தில் கடைகள் வைக்கவேண்டு மென்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தக் கேள்வி நன்னிலம், நாகப்பட்டிணம், மாயூரம் தாலூகாக்களின் பக்கத்திலுள்ள காரைக்கால், பாண்டிச்சேரி எல்லையைப் பற்றியது. அதில் மைல் கணக்கு ஒன்றுமில்லை. அவைகள் வேறு ராஜ்யம், இப்பொழுது அங்கு மதுவிலக்கு இல்லை, இங்கு இருக்கிறது. அவ்வளவுதான்.

SRI A. GOVINDASAMY : தென் ஆர்காடு மாவட்டத்தை ஒட்டியுள்ள பாண்டிச்சேரி பகுதியில், நம் பகுதிகளின் அடுத்துள்ள சில கிராமங்களில் கள்ளுக்கடைகள், சாராயக் கடைகள் இருப்பதால் இங்குள்ளவர்கள் அங்கு சென்று அதிகமாக குடிப்பதற்கு சந்தர்ப்பம் இருப்பதால் அங்கேயும் குடி ஒழிப்புத் திட்டத்தை வற்புறுத்த தென் ஆற்காடு மதுவிலக்கு கமிட்டியார் அரசாங்கத்திற்கு சிபார்சு செய்திருக்கிறார்கள். அது பற்றி அரசாங்கம் என்ன யோசித்திருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. மதுவிலக்கு கமிட்டியார் சிபார்சு செய்திருக்கலாம். ஆனால் இந்த அரசாங்கம் ஒன்றும் செய்ய முடியாது.

SRI A. V. P. ASAITHAMBI : பாண்டிச்சேரியும் தமிழகப் பிரதேசத்தை சேர்ந்திருப்பதால் அதைத் தாயகத்தோடு இணைத்து விட்டோமென்று சொன்னால் நேரடியாக மதுவிலக்கு அங்கேயும் வந்து விடும். ஆகவே அந்த முயற்சியை சர்க்கார் கைக்கொள்ளுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது வேறு விஷயம். அது இதிலிருந்து எழவில்லை.

5th February 1959]

*Advanced technical studies*

* 32 *Q*.—Srj T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to stated whether the United States of America Government have selected any candidates this year from this State for advanced studies in the United States of America who would serve as teachers in the Technical Institutes in India after their training?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

*Government Hospital, Sirkali*

***33 *Q*.—Sri C. MUTHIAH :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சீர்காழி தாலூகா தலைமை ஆஸ்பத்திரி எப்போது சர்க்கார் வசமாயிற்று ?

(ஆ) அதன் பின் இதுவரையில் அதில் நடந்த அபிவிருத்தி வேலைகள் என்னென்ன ?

(இ) புதிதாக கட்டிடங்கள் கட்டவும், கருவிகள் வழங்கவும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) From 1st December 1956.

(*b*) None so far.

(*c*) The following proposals are under consideration :—

(i) Construction of additional ward of 20 beds.

(ii) Construction of an X-ray Block.

(iii) Construction of an overhead tank with pipe connections.

Sri C. MUTHIAH : இப்பொழுது இருக்கிற ஆஸ்பத்திரியில் இட நெருக்கடி மிகுதியாக இருக்கிறது; வேறு ஆறு ஏக்கர் நிலம் பக்கத்தில் இருப்பதால் அங்கு "எக்ஸ்ரே", புதிய வார்ட் முதலிய வைகளை கட்டினால் அதிகப்படியாக செலவு செய்யப்படும் பணம் நல்ல முறையில் செலவு செய்யப்படுமென்று எழுதியனுப்பி அது நிராகரிக்கப் பட்டு விட்டது. அதிகப்படியான பணம் அங்கு செலவு செய்யப்படும்போது அவைகளை நல்ல இடத்தில் அமைப்பதற்காக அதை மீண்டும் பரிசீலனை செய்ய அரசாங்கம் உத்தரவிடுவார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : தற்போது இந்த சௌகரியங்களை எல்லாம் ஏற்படுத்த டிஸ்ட்ரிக்ட் மெடிகல் ஆபீஸர் சிபார்சு செய்திருக்கிறார்கள். அது பரிசீலனையில் இருக்கிறது. கனம் அங்கத்தினர் சொல்வது பெரிய விஷயம். அதை இப்பொழுது கவனிப்பதற்கில்லை.

Sri K. B. S. MANI : ஒரு பக்கம் லூதரன் மிஷனுக்கு சொந்தமான பாதிரியார் வீடும், பின் பக்கம் வாய்க்காலும் இருப்பதால், சீர்காழி ஆஸ்பத்திரி கட்டிடத்தை விஸ்தரிக்க இடம் கிடையாது. ஆகவே அதை வேறு ஒரு இடத்திற்கு மாற்றினால் ஒழிய சர்க்கார் திட்டப்படி கட்டிடம் கட்டவோ அல்லது மற்ற சிபார்சுகள் அமுல் நடத்தவோ இடவசதி கிடையாது. ஆகவே அந்த ஆஸ்பத்திரியை பக்கத்திலுள்ள இடத்திற்கு மாற்றியமைத்து அங்கு இந்த கட்டிட விஸ்தரிப்புத் திட்டத்தை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. A. MANICKAVELU : அந்த இடத்தை வந்து பார்க்கத் திட்டமிடுகிறேன்.

*Mineral survey at Kanyakumari district*

* 34 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any mineral survey was made in 1957 or 1958 in the Kanyakumari district;

(*b*) if so, in which taluk of the district;

(*c*) whether thorium, gold and petrol were found in the district; and

(*d*) in which village and in which survey numbers the above minerals, if any, were found?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir. The systematic geological mapping and mineral survey in Kanyakumari district were commenced by the Geological Survey of India during the field season 1957–58.

(*b*) An area of about 35 square miles falling in the hilly areas of the Thovala taluk has been mapped so far.

(*c*) No, Sir.

(*d*) Does not arise in view of the answer to clause (*c*).

*Biological Control Centre*

*35 *Q.*—**Sri K. B. S. MANI (on behalf of Sri M. C. Muthukumaraswamy):** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் நெற்பயிர்களை அரிக்கும் பூச்சிகளைத் தடுப்பதற்காகப் பூச்சிகள் தடுக்கும் ஆராய்ச்சி நிலையம் (**Biological Control Centre**) ஒன்றை ஏற்படுத்த அரசாங்கம் உத்தேசித்துள்ளதா ?

(ஆ) அப்படியானால் எப்போது ?

(இ) எந்த இடத்தில் அது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

*Small Savings Scheme*

* 36 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the measures taken by the Government for securing Compulsory Small Savings in the State as recommended by the National Development Council meeting held in November 1958;

(*b*) whether there is any proposal to increase the commission paid to agents who collect Small Savings in the State or to fix a minimum pay for them; and

5th February 1959]

(*c*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) The National Development Council has not yet taken a firm decision on "Compulsory Small Savings Scheme". The question is still under consideration.

(*b*) No, Sir. There is no such proposal.

(*c*) Does not arise.

SRI N. K. PALANISAMI: ரெவினியு அதிகாரிகள் விவசாயிகளிடமிருந்து நிலவரி வசூல் செய்யும்போது இரண்டு பங்கு கட்டாயமாக வசூல் செய்யவேண்டுமென்று சர்க்கார் உத்தரவு இட்டிருக்கிறார்கள். ஆகவே, மழையின்மையால் கஷ்டப்படும் பிரதேசங்களில் இருப்பவர்களை கஷ்டப்படுத்தாமல் இருக்க உத்திரவு இடுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பழனிசாமி அவர்கள் சொல்வது மாதிரி உத்தரவு ஒன்றும் கிடையாது.

SRI M. KALYANASUNDARAM: உத்தரவு போடாமல் இருக்கலாம். ஆனால் 1958-59-ம் வருடத்தில் நம் ராஜ்யத்திலிருந்து எவ்வளவுதான் இந்த சிறு சேமிப்புத் திட்டத்திற்கு வசூல் செய்ய வேண்டுமென்று சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள் ? வருடக் கடைசியில் வசூல் செய்தால் நிலவரி செலுத்தக் கூடிய அதே சமயத்தில் விவசாயிகளிடமிருந்து சிறு சேமிப்புத் திட்டத்திற்கு வசூல் செய்வதினால் பட்டாதார்களுக்கு சிரமம் ஏற்படுகிறது. ஆகவே அதை முன்கூட்டியே செய்வதற்கு சர்க்கார் ஆலோசிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒவ்வொரு ஜில்லாவிலும், அங்கிருக்கக்கூடிய நிலைமையை அனுசரித்து எந்த சமயத்தில் இந்த தேசீய சேமிப்புத் திட்டத்தை தீவிரமாக அமுல் நடத்தவேண்டுமென்று ஆலோசித்து முடிவு செய்கிறார்கள். அறுவடையாகும்போதுதான் மக்களிடம் பணம் இருக்கும். அப்பொழுதுதான் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியும். அங்கத்தினர் அவர்கள் சொல்லக்கூடிய யோசனையை மனதில் வைத்துக் கொண்டுதான் எந்த சமயத்தில் இதைச் செய்யவேண்டுமென்று இப்பொழுது நிர்ணயிக்கிறார்கள்.

SRI A. GOVINDASAMY: சிறு சேமிப்புத் திட்டத்திற்காக பஞ்சாயத்து போர்டுகளில் இருக்கிற பணத்தை வற்புறுத்தி வாங்குவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? இதனால் திட்ட வேலைகள் பாதிக்கப்படும் என்று உணர்ந்து அப்படி அங்கிருந்து வாங்காமல் இருக்க அரசாங்கம் உத்திரவிடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பஞ்சாயத்துகள் வேண்டுமென்றால் இதில் போடலாம். ஆனால் சமீபத்தில் ஒரு உத்தரவு மாதிரி சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துகள், முனிசிபாலிடிகள் இவைபோன்ற ஸ்தாபனங்களிலிருந்து இதற்கு நிதி போட வேண்டிய அவசியமில்லையென்று எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

10 a.m.

SRI V. K. KOTHANDARAMAN: சிறு சேமிப்புத் திட்டத்தின் கீழ் வட ஆற்காடு ஜில்லாவில் 1958 ஜனவரி-பெப்ரவரியில் வசூல் செய்யப்பட்ட தொகையான சுமார் 2,000 ரூபாய் வரைக்கும் அங்குள்ள மணியக்காரர் கையிலேயே வைத்துக்கொண்டு இருந்ததாகவும், அதற்கான ரசீதுகளையோ அல்லது அதற்கான புத்தகங்களையோ, வசூல் செய்த பணத்தையோ கொடுக்கப்படாததின் காரணமாக அவர் பேரில் நடவடிக்கை எடுக்கப்படவேண்டுமென்று சொல்லப்பட்டது. அதற்கு அவர் பேரில் பணம் வசூலிக்கப்பட்டதே யொழிய நடவடிக்கை எடுக்கப்படவில்லை

[5th February 1959

என்று தெரிகிறது. ஆகவே அவர் பேரில் உடனடியாக தக்க தீவிர நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன் வருமா ? அவர் பேரிலுள்ள இசும் உரிமையை ரத்து செய்யும்படி சர்க்கார் உத்திரவிடுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இம்மாதிரி நாணய மற்ற முறை நடந்து கொண்டு வருவதாக வேறு எந்த ஜில்லாக்களிலிருந்தும் புகார் வரவில்லை. வடாற்காடு ஜில்லாவில் நடைபெற்றிருப்பதாக இப்போது அங்கத்தினர் அவர்கள் சொல்லுகிறார்கள். இதைப் பற்றி விசாரிக்கிறேன்.

DEPUTY SPEAKER : We have half a dozen questions more. I will take five minutes more and finish them.

*Small Savings Scheme*

* 37 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state the amount collected under the Small Savings Scheme, district-war and the target amount fixed for collection in 1957–58?

THE HON. SRI C. SUBRAMANIAM : The target for Small Savings collections in the State during 1957–58 was Rs. 10 crores and the total collections amounted to Rs. 873 lakhs (roundly).

The districtwar collections were as follows :—

| District. (1) | Amount collected. (2) RS IN LAKHS. |
|---|---|
| North Arcot | 52 |
| Madras | 156 |
| Salem | 50 |
| Chingleput | 31 |
| Coimbatore | 108 |
| Tanjore | 83 |
| South Arcot | 60 |
| Nilgiris | 12 |
| Kanyakumari | 21 |
| Ramanathapuram | 39 |
| Madurai | 103 |
| Tiruchirappalli | 86 |
| Tirunelveli | 72 |
| Total | 873 |

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, may I know the districts which have exceeded, and also the districts which have fallen short of, the target?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the information with me. But the hon. Member will notice that we fixed Rs. 10 crores as the target, and the total amount collected is about Rs. 873 lakhs Therefore, the target has, more or less, been achieved.

5th February 1959]

*Amount spent for education out of temple funds*

* 38 Q.—SRI C. MUTHIAH : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1957–58-ல் தர்ம பரிபாலன இலாகாவிலிருந்து கல்விக்காக தொகை மாகாணத்தில் எத்தனை இடங்களில் செலவு செய்யப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No fund was allotted for the purpose by the Hindu Religious and Charitable Endowments (Administration) Department. The Honourable Member apparently refers to the religious institutions from which funds were diverted for educational purposes. If so, in three places, surplus funds of religious institutions, were diverted for educational purposes.

SRI K. B. S. MANI : அரசாங்கத்திற்கு அதிகமான தொந்தரவு கொடுக்காமலேயே திருப்பனந்தாள் மடத்திலிருந்து அப்பகுதியில் இருக்கும் தனியார் துறை பள்ளிக்கூடங்களை எடுத்து நடத்துவதற்கு கேட்ட போது தனியார்கள் மறுத்துவிட்டார்கள். இம்மாதிரி மறுத்துவிட்ட விபரம் அரசாங்கத்திற்குத் தெரியுமா ? தெரியுமென்றால் இம்மாதிரி மடாலயங்கள் கோருகிறபடி தனியார் பள்ளிகளை நல்ல முறையில் நடத்துவதற்கு மடாலயங்களின் கீழ் ஒப்படைக்க சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அரசாங்கத்தினிடத்தில் தகவல் இல்லை. கூடுதல் தகவல்களை கனம் அங்கத்தினர் அவர்கள் கொடுத்தால் அதைப் பற்றி பரிசீலிக்கலாம்.

SRI M. C. MUTHIAH : உயர்நிலை பள்ளிகளில் பிரார்த்தனை மண்டபம் கட்டவேண்டுமென்று கோரிக்கைகள் வந்தால் ஆங்காங்கு இருக்கும் மடாலயங்கள் மூலமாக அந்த பிராத்தனை மண்டபங்களை கட்டிக்கொடுக்க அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி சில யோசனைகள் இருந்து வருகின்றன. சில தேவைகள் இம்மாதிரி அங்கீகரிக்கப்பட்டும் வருகின்றன.

SRI K. R. VISWANATHAM : தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கூறின எஞ்சிய பணத்திலிருந்து செலவு செய்த மூன்று இடங்கள் எவையெல்லாம் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒன்று மணலி லட்சுமண முதலியார் ஸ்பெஷிபிக் என்டோமெண்ட்ஸ் தொகையிலிருந்து சென்னை தியாகராஜா காலேஜில் ஒரு பிரார்த்தனை மண்டபத்திற்காக 10 ஆயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது. இரண்டு : திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்திலிருந்து அங்குள்ள போர்டு ஹைஸ்கூலுக்கு பகல் உணவிற்காக 200 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்று : சங்கரநயினார் கோவில், சங்கர நாராயணசுவாமி கோவில் தேவஸ்தானத்திலிருந்து அங்குள்ள கோமதி அம்மாள் போர்டு ஹைஸ்கூலுக்கு பகல் உணவிற்காக 303 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : பல தேவஸ்தானங்களிலும் கல்விக்காக பணம் ஒதுக்குவதற்கு அவர்களுக்கு உத்தரவில்லை என்றும், அதற்காக சட்டம் இல்லை என்றும் கூறுகிறார்கள். ஆகவே அம்மாதிரி தேவஸ்தான உபரி நிதியிலிருந்து கல்விக்கு ஒதுக்குவதற்கு அரசாங்கம் ஏதாவது ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுவாக எல்லா இடங்களிலும் கல்விக்காக மட்டும் ஒதுக்கப்படுவதில்லை. ஆனால் சில இடங்களில் கல்விக்காக ஒதுக்கப்பட்டும் வருகிறது. இதைப்பற்றி ஆலோசித்து

[5th February 1959

சட்டம் திருத்தப்பட்டு வருகிறது. அவ்விதம் திருத்தப்பட்ட மசோதாவை இந்த சட்ட மன்றத்தில் கூடிய சீக்கிரம் சமர்ப்பிக்கலாம் என்று நினைக் கிறேன்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், திருப்பனந் தாள், பந்தநல்லூர் கிராமங்கள் தேவஸ்தான கிராமங்களாக இருப்பதினால், அந்த கிராமங்களில் தேவஸ்தான ரிஸர்வ் நிதியிலிருந்து ஹைஸ்கூல்கள் ஏற்படுத்த வேண்டுமென்று அரசாங்கத்திற்கும் தேவஸ்தானங்களுக்கும் பல விண்ணப்பங்கள் அனுப்பியும் அவை கவனிக்கப்படாமல் இருந்து வருகின்றன ஆகவே அந்த இடங்களில் உடனடியாக இந்த நிதியிலிருந்து ஹைஸ் கூல்கள் ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய வேண்டு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அவர்களைக் கட்டாயப் படுத்த முடியாது.

*Punka-pullers*

* 39 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state the reason for keeping punka-pullers in Government service?

THE HON. SRI C. SUBRAMANIAM : Punka-pullers are employed for pulling punkas in a few Government offices which have not yet been electrified and housed in buildings which are not airy and well ventilated.

SRI N. K. PALANISAMI : ஸார், இன்னும் சில இடங்களில் அதாவது எலக்ரிஸிட்டி இல்லாத இடங்களில் பங்கா இழுப்பவர்கள் இருந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த இடங்களிலும் எலக்ரிஸிட்டி போடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : போட்டுக்கொண்டுதான் இருக்கிறோம்.

*Retrenchment in the Commercial Taxes Department*

* 40. Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of Last Grade Servants of the Commercial Taxes Department who have been recently thrown out of employment on account of retrenchment measures in the departments?

THE HON. SRI R. VENKATARAMAN : 205 Last Grade servants were retrenched due to the re-organisation of the commercial Taxes Department with effect from 1st October 1958.

SRI M. S. SELVARAJAN : ஸார், இதுவரை மாற்றுவேலை எத்தனை பேர்களுக்கு கொடுக்கப்பட்டது. இன்னும் கொடுக்கப்படாமல் இருக்கும் ஆட்களுக்கு வேலை கொடுக்க இன்னும் எத்தனை காலம் ஆகும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : டிசம்பர் மாதம் 1-ம் தேதி வரை 104 பேர்களுக்கு பெர்மனண்டாகவும், 23 பேர்களுக்கு டெம்பரரியாகவும் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. மீதியுள்ள 78 பேர்களுக்கும் சீக்கிரமாகவே வேலை கொடுக்கப்படும்.

5th February 1959]

*Temple lands*

* 41 *Q*.—SRI C. MUTHIAH : கனம் உள்விவகார அமைச்சா அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் தர்ம ஸ்தாபனங்களில் உள்ள ஆதின கோயில் நிலங்களைக் குத்தகைக்கு விடாமல் நேரடி சாகுபடியாளருக்குக் கொடுக்க அரசாங்கம் உத்தரவிட உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI C. MUTHIAH : இந்தப் பிரச்னை முக்கியமான பிரச்னையாக இருந்து வருவதால், இந்த வருட ஆரம்பத்திலேயே குத்தகை கொடுக்க வேண்டியதை நேரடியாக விவசாயிகளுக்கே கொடுத்தால் வருங்காலத்தில் நாம் கொண்டு வரப்போகும் சீர்திருத்தத்திற்கும் மிக ஆதரவாக இருக்கும். ஆகவே இந்த விஷயத்தைப்பற்றி கூடுதலாக விவாதிக்க அரை மணி நேரம் ஒதுக்கித்தர வேண்டும் என்று தலைவர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றியும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதற்கான சட்டம் கொண்டு வருகிற சமயத்தில் அதற்குத்தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

DEPUTY SPEAKER : The hon. Member has got an opportunity to speak about this during the discussion on the Governor's Address.

*Hides and skin market*

* 42 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஆட்டுத்தோல், மாட்டுத்தோல் விற்பனை மார்க்கெட், லண்டனில் இருப்பதை சென்னையிலேயே வைத்து நடத்துவதற்கான ஏற்பாடு செய்யும்படி மத்திய சர்க்காரை சென்னை சர்க்கார் கேட்டுள்ளதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir. The matter is under consideration.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், நூற்றுக்கு 90 சதவிகிதம் வருமானம் கிடைக்கக்கூடிய டானரி மார்க்கெட் இப்போது லண்டனில் இருந்து வருகிறது. இந்த மார்க்கெட்டை சென்னையில் ஏற்படுத்தினால் அரசாங்கத்திற்கு சுமார் 5 கோடி ரூபாய் வரை வருமானம் வரும் என்றும் தெரிகிறது. ஆகவே இந்த மார்க்கெட்டை சென்னையில் ஏற்படுத்த வேண்டும் என்று மத்திய அரசாங்கத்திற்கு நமது அரசாங்கம் வற்புறுத்துமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதில் சர்க்காருக்கு வருமானம் வருமா அல்லது வராதா என்பது முக்கியப் பிரச்னை அல்ல. நமது நாட்டில் கிடைக்கின்ற தோல்கள் அதிகமாக வெளிநாடுகளில் விற்பனை ஆகவேண்டும். வெளி நாடுகளில் விற்பனை ஆகவேண்டுமென்றால் அதற்கு ஏலம் போடக் கூடிய இடம் வெளிநாட்டில்தான் இருந்தாகவேண்டியிருக்கிறது. இதைப்பற்றியும் ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. இதைப்பற்றி இரண்டு விதமான அபிப்பிராயம் இருந்து வருகிறது. The Principal of the Institute of Leather Technology இவை உற்பத்தி செய்யப்படுகின்ற இடத்தில் மார்க்கெட் இருப்பது நல்லது என்றும், the Director of the Central Leather Research Institute லண்டனில் இருந்தால் தான் தோல் நல்ல முறையில் வியாபாரம் ஆகும் என்றும் அபிப்ராயப்படுகிறார்கள். அதோடு லண்டனில் இருக்கின்ற இந்திய ஹை கமிஷனர் அவர்களிடத்தில் அபிப்பிராயம் கேட்டதில் லண்டனில்

[5th February 1959

இருந்தால் தான் உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலுள்ள வியாபாரி களுக்கும் வந்து ஏலம் கேட்பதற்கு வசதியாக இருக்கும், அதோடு வியா பாரமும் அதிகமாக இருக்கும் என்று அபிப்பிராயப்பட்டார்கள். ஆகவே இதில் தற்போது எந்தவிதமான முடிவும் எடுக்கப்படாமல் இருக்கின்றது

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk * at the Commencement of a speach indicates revision by the Member].

III.—STATEMENT BY THE HON. MINISTER FOR PUBLIC WORKS.

DEPUTY SPEAKER : The Hon. Minister for Public Works will now make a statement.

THE HON. SRI P. KAKKAN : Mr. Deputy Speaker, in reply to clause (*c*) of Starred Question No. 138 put by Sri M. Jagannathan, M.L.A., the House was informed on 10th September 1958 that acquisition of house-sites for Harijans of Kilgudalur village, Olakkur firka, Tindivanam taluk, South Arcot district, was deferred, as the Harijans had not remitted the promised contribution. On further verification, it is found that the Harijans had actually remitted the contribution in July 1957. The remittance was, however not brought to the notice of the Collector's office. The Collector of South Arcot has been instructed to expedite the acquisition of house-sites for the Harijans of Kilgudalur village, Tindivanam taluk.

IV.—ANNOUNCEMENTS.

PANEL OF CHAIRMEN.

DEPUTY SPEAKER : Under rule 14 (1) of the Madras Assembly Rules, I nominate the following hon. Members to be the Panel of Chairmen for the current session :—

(1) Sri R. Subramaniam.

(2) Srimathi Rajathi Kunchithapatham.

(3) Sri S. A. M. Annamalai Odayar.

(4) Sri V. K. Kothandaraman.

(2) AMENDMENTS TO THE MOTION OF THANKS TO THE GOVERNOR'S ADDRESS.

DEPUTY SPEAKER : Under rule 5 (1) of the Assembly Rules in consultation with the Leader of the House and the Business Advisory Committee, I have allotted four days for the discussion of the Governor's Address from the 5th to 9th February 1959. Today, there will be a general discussion and the amendments may be moved on the 6th February 1959. The speakers who participate on the first day may not participate in the discussion on the subsequent days. I have fixed 2 p.m., on 5th February 1959 (today) for the receipt of notice of amendments to the Motion of thanks to the Governor's Address.

(3) DECISION OF THE BUSINESS ADVISORY COMMITTEE

DEPUTY SPEAKER : The following is the programme of business of the House as approved by the Business Advisory Committee at its meeting on 4th February 1959 :—

| | |
|---|---|
| 10th and 11th February 1959. | General discussion on the Madras General Sales Tax Bill, 1958. |
| 12th, 13th and 14th February, 1959. | Clause by clause consideration of the Madras General Sales Tax Bill, 1958, and passing of the Bill. |
| 16th February 1959 .. | Non-official business. |
| 17th and 18th February 1959 | Official business—Government Bills |

*Budget for the year* 1959–60.

| | |
|---|---|
| 2nd March 1959 .. .. | Presentation of the Budget. |
| 3rd to 10th March 1959. (6 days). | General Discussion on the Budget. |
| 11th to 31st March 1959 .. | 15 days—Voting on Demands for Grants.<br>1 day—Supplementary Statement of Expenditure.<br>1 day—Appropriation Bills. |

It was also decided to hold a session of the Assembly at Ootacamund from 20th to 30th April 1959.

The House will meet daily from 9 a.m. to 1–30 p.m.



V.—PRESENTATION OF THE REPORT OF THE SELECT COMMITTEE ON THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL No. 6 OF 1958).

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I present the Report [a] of the Select Committee on the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958).

VI.—PRESENTATION OF THE REPORT AND PROCEEDINGS OF THE COMMITTEE OF PRIVILEGES "DINA THANTHI" CASE No. 2.

SRI K. RAMACHANDRAN : Sir, I present the report[b] of the Committee of Privileges ('Dina Thanthi' case No. 2).

---

[a] Printed as Appendix IV on pages 94–142 infra.

[b] Printed as Appendix V on pages 143–152 infra.

## VII.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

* SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் நேற்றைய தினம் சட்ட சபையில் நிகழ்த்திய உரைக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் நான் அனுப்பியுள்ள தீர்மானத்தைப் பிரேரேபிக்கிறேன் :—

" That an humble address be presented to the Governor that the Members of the Madras Legislative Assembly thank him for the address delivered to the Members of the Legislature on the 4th February 1959. "

SRI T. T. DANIEL : I second the motion, Sir.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : கவர்னர் அவர்களுடைய உரையில், இந்தச் சட்ட சபையில் கடந்த ஆண்டிலே நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளைப் பற்றியும், பல பிரச்சினைகளைப் பற்றியும், சிக்கலான பிரச்சினைகளாக இருந்தபோதிலும், கடுமையாகத் தாக்கப்படுகிற பிரச்சினையாக இருந்தபோதிலும், காரசாரமான பேச்சுக்கள் இருந்தபோதிலும், அதன் நடுவிலே கணிசமான முன்னேற்றத்தைக் கண்டேன்—அதிலே கட்டுப்பாடு, சகிப்புத் தன்மை, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை முதலிய இனிய பண்புகளைக் காண முடிந்தது என்று பாராட்டிப் பேசுவதற்கு நாம் கடமைப் பட்டிருக்கிறோம். அது நம் ஒற்றுமையை மேலும் மேலும் உயர்த்துகிறது என்ற முறையில் நமது மாநிலம் மட்டுமல்ல, நமது பாரதத்திலுள்ள அத்தனை பேருக்கும் ஒரு எடுத்துக் காட்டாக இருக்கிறது என்று சொல்லியிருப்பது பெருமைபடக் கூடிய ஒரு விஷயம்.

பருவ நிலையைப் பற்றிப் பேசும்போது, திருநெல்வேலி, ராமநாதபுரம் முதலிய மாவட்டங்களில் மழை இல்லாததன் காரணமாக—வானம் பொய்த்து விட்டது, ஆகவே அவனுடைய வருமானம் பொய்த்துவிட்டது. அவன் எண்ணியிருந்த கோட்டைகள் பொய்த்துவிட்டன—அவன் எதிர் பார்த்த அளவு வருமானம் வாழ்க்கையிலேயே இல்லாததால் பஞ்ச நிலையில் பரிதவிக்க வேண்டி நேரிடும் என்று எண்ணியிருந்தவர்களுக்கு, என்ன உதவி தேவையோ, அந்த உதவி அளிக்கப்படும்—நிவாரணம் அளிக்கப் படும்—என்று கூறியிருப்பது பாராட்டுக்குரியது.

விளைச்சல் நன்றாக இருக்கும், அதனால் அறுவடை நன்றாக இருக்கும் என்று எதிர்பார்த்திருந்தோம். அறுவடை அறிகுறிகள் நன்மை பயக்கும் முறையில் இருந்த போதிலும், சில இடங்களில் ஏமாற்றத்தைத் தந்திருக்கின்றதன் காரணமாக—ஒரு அதிர்ச்சி வைத்தியம் என்று சொல்லலாம்—அந்த முறையில் அந்தந்த மாவட்டக் கலெக்டர்கள் அந்தந்த மாவட்டத்திலுள்ள வியாபாரிகளைத் தனிப்பட்ட முறையில் சந்தித்து, உணவு தானியத்தை எடுத்து ஜனங்களுக்குக் கொடுக்க வேண்டும், விலை குறைவாகக் கொடுக்க வேண்டும்—மலிவான விலைக்குக் கொடுக்க வேண்டும்—என்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டது. அதன் காரணமாக நெல்லை மாவட்டத்தை எடுத்துக் கொண்டால், மாவட்டக் கலெக்டர் மற்ற மாவட்டங்களைப்போலவே வியாபாரிகளைச் சந்தித்துப் பேசினார். சந்தித்து அவர்களிடம் 13 அணவுக்கு ஒரு படி அரிசி போடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதனால் ரூபாய் 1–3–0 வீதம், ரூபாய் 1–4–0 வீதம், விற்றுக் கொண்டிருந்த ஒரு படி அரிசி திடீரென்று அந்த நாளே 13 அணுவிற்கு மக்களுக்குக் கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அந்த மாதிரி ஒரு நிரந்தரமான வழி செய்யவேண்டும் என்று தேசிய வளர்ச்சிக் கவுன்சிலில் அரசாங்கமே உணவு தானிய மொத்த வாணிபம் முழுவதையும் ஏற்று நடத்தவேண்டும்— அதாவது ஸ்டேட் டிரேடிங் நடத்தவேண்டும்—என்று ஆலோசனை கூறியுள்ளது, ஆனால் இன்னும் முடிவுக்கு வரவில்லை என்று சொல்வதை நாம் குறித்துக் கொள்ள வேண்டும். சர்க்காரே எடுத்து இம்மாதிரி

5th February 1959] [Srimathi Rajathi Kunchithapatham]

உணவு தானிய விற்பனையை நடத்த வேண்டுமென்று சொல்லும்போது அநேகம் பேர்களுக்கு அச்சமும், திகிலும்—பயமும் கூட—ஏற்படக்கூடும். ஆறு அவுன்ஸ் ரேஷன் என்ற பழைய பல்லவி மீண்டும் வந்து விடக் கூடாதே, "அவர்கள் போடும் அரிசியை வாங்காவிட்டாலும் பரவாயில்லை, பட்டினிகிடந்து விடுவோம், ஏனென்றால் நாற்றம் பிடித்த அரிசியைச் சாப்பிட முடியாது" என்று ரேஷன் இருந்த காலத்தில் மக்கள் கஷ்ட நஷ்டத்திற்கு உள்ளானார்கள் என்பது நமக்கு ஞாபகம் இருக்கிறது. அரசாங்கமே எடுத்து உணவு தானிய வியாபாரம் செய்யும்போது பல இன்னல்கள் இருக்கின்றன, இக்கட்டான நிலைமைகள் இருக்கின்றன. கொடௌனில் 2 லட்சம் டன் அரிசி வாங்கி வைக்க வேண்டும், நெருக்கடி யான நிலைமை ஏற்படும்போது அதை எடுத்து மக்களுக்கு விநியோகிக்க வேண்டும், அதனால் உணவு தான்யங்களின் விலை ஏறிவிடாமல் பார்த்துக் கொள்ளலாம். ஆகவே 2 லட்சம் டன் தானியம் வாங்குவது என்பது வரவேற்கத் தக்கது.

ஏனென்றால், இப்பொழுது இரண்டு லட்சம் டன் அரிசி வரையில் சர்க்கார் சேமித்து வைத்துக்கொள்ளப் போகிறார்கள், கூட்டுறவு இயக்கங் கள் மூலமாகவும், அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளின் வாயிலாகவும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் இன்று மக்களிடமும் வியாபாரிகளிடமும், உணவுத் தானியங்களின் விலை அதிகம் ஏறிக்கொண் டிருக்கிறதே என்ற பீதி வந்துவிட்டது. இந்த நிலையில் ஒன்று மட்டும் நான் சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அரி சியை எடுத்துப் பாதுகாத்து வைத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய நிலை மைக்கு "கோடௌன்" வேண்டும். "கோடௌ"னிலே அரிசியை அவர் கள் ஸ்டாக் பண்ணி வைத்துக்கொள்ளும்போது, கவனமாக இருக்க வேண்டும். தன்னிடத்தில் ஆயிரம் மூட்டை அரிசி முடங்கியிருந்தால், அந்த அரிசி கெட்டு விடக்கூடாதே, அரிசி கெட்டுவிட்டால் முதல் கெட்டு விடுமே என்ற உணர்ச்சியும், ஊக்கமும் தனிப்பட்ட வியாபாரிகளிடம் இருப்பதால், அவர்கள் அடிக்கடி தங்களிடமுள்ள ஸ்டாக்குகளைப் பாது காத்துக்கொள்கிற தன்மையினால் அது பாதுகாக்கப்படுகிறது. நல்ல அரி சியை வியாபாரிகளிடமிருந்து நாம் அப்போதைக்கப்போது பெற்றுக்கொள் கிறோம். ஆனால், அரசாங்கமே எடுத்து அம்மாதிரி வியாபாரம் செய்ய வேண்டும் என்ற நிலை வருகிறபோது, உணவுத் தானியங்களைப் பாது காத்து வைத்துக்கொள்ளும் பொறுப்பை, அதாவது பாதுகாப்புச் சாவியை அதிகாரிகள் கையிலே நாம் கொடுக்க வேண்டும் என்ற நிலை ஏற்படுகிறது. அவர்கள் என்ன தான் கருத்துடன் கவனித்துக் கொண்டாலும், தனி மனிதனிடமும் தனி வியாபாரியிடமும் காணப்படும் ஊக்கமும் உருக்கமும் அவர்களிடம் இருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆகவே, இம் மாதிரி சர்க்காரே எடுத்து உணவு தானிய வியாபாரம் செய்யவேண்டும் என்பது சிறிது ஆலோசித்துச் செய்ய வேண்டிய காரியம் என்பதை நன் றாகச் சர்க்கார் உணர்ந்து தான், அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகள் மூலமாக வும், கூட்டுறவு இயக்கங்கள் மூலமாகவும் இரண்டு லட்சம் டன் அரிசி வாங்க இப்பொழுது முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இதுமாதிரி யான ஸ்டேட் ட்ரேடிங், அதாவது அரசாங்கமே உணவுத் தானிய மொத்த வாணிபத்தை ஏற்று நடத்த வேண்டும் என்று தேசீய வளர்ச்சிக் கழகம் ஆலோசனை கூறியுள்ளது என்பதிலிருந்து இன்னும் முடிவுக்கு வரவில்லை என்பதைத்தான் நாம் இந்த இடத்திலே குறித்துக்கொள்ள விரும்பு கிறோம். ஆகையால் இது ஆலோசித்துச் செய்ய வேண்டிய விஷயம். ஆலோசித்துச் செய்வதிலே வேண்டிய நடவடிக்கை எடுத்துச் செய்வார்கள் என்று எதிர்பார்ப்போம்.

உணவுத் தானியத்தைப் பொறுத்தவரையில், இந்த நாட்டிலே எப் போதுமே தேவைக்குச் குறைவான முறையில்தான் இருந்து வந்திருக் கிறது. அணைக்கட்டுத் திட்டங்கள் கட்டி விட்டோம், திட்டங்களினாலே ஆங் காங்கே யிருக்கும் வயல்களுக்கும், தரிசாகக் கிடந்த இடங்களுக்கும் தண் ணீர் வசதி செய்து கொடுத்துவிட்டோம் என்று நாம் ஒரு இடத்திலே சந்தோஷப்படுகிற நிலைமையிலே இருக்கும்போது, இன்னொரு இடத்திலே பார்க்கிறோம்—பருவக் காலங்கள் தவறி விட்டதால், பருவ மழை பொய்த்து

[Srimathi Rajathi Kunchithapatham] [5th February 1959

விட்டதால், ஆங்காங்கே பஞ்ச நிலைமையும் விளைச்சலின்மையும் தோன்றி விடுகிறது. ஆகவே, ஒரு சாண் நாம் மேலே ஏறிவிட்டால் இரண்டு சாண் கீழே சறுக்குகிற நிலைமையிலே நமக்கு இயற்கை சதி செய்யக்கூடிய வருத்தம் தரும் நிகழ்ச்சியை நாம் ஆங்காங்கே பார்க்கிறோம். உணவு உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணத்தை மக்களிடையே நிரந்தரமாக சாஸ்வதமாக உண்டாக்கத் தக்க முறையில் நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் பலப்பல கொண்டு வந்தோம். நிலத்திலிருந்து விவசாயிகளை வெளியேற்ற முடியாது, நிலத்திலிருந்து விவசாயிகளுக்குக் கிடைக்கும் ஊதியம் கட்டாயம் அவர்களுக்குக் கிடைக்கவேண்டும் என்று பல தரப்பட்ட நிலச் சீர்திருத்தச் சட்டங்களைக் கொண்டுவந்தோம். ஆனால், நிலச் சீர்திருத் தச் சட்டங்களினால் மட்டும் நிரந்தரமாக இந்த உணவுப் பிரச்னையைத் தீர்த்து விட முடியாது, சுயதேவையைப் பூர்த்தி செய்துவிட முடியாது. ஜனத்தொகை இந்த நாட்டிலே நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே போய்க்கொண் டிருக்கிறது. உணவுத் தானியங்கள் மக்களுக்குப் போதுமான அளவு கிடைக்கவில்லையே, இவ்வளவு லட்சம் டன் உற்பத்தி செய்துவிட்டோம் என்று சர்க்கார் புள்ளி விவரம் காட்டுகிறதே என்று எதிர்தரப்பிலே சொல்லப்படுகிறது. உண்மையாகவே, உற்பத்தியை அதிகமாகத்தான் நாம் காட்டியிருக்கிறோம். இருந்தாலும், ஜனப் பெருக்கம் நெல் உற்பத்தி அளவை மிஞ்சிப் போய்விடுவதால், நாட்டுப் புறங்களிலே உள்ளவர்கள், விவசாயத்தை நம்பி சிறு சிறு நிலங்கள் வைத்துக் கொண்டிருந்தவர்கள், மழை இல்லாத காரணத்தால் விவசாயம் செய்வதை விடுத்து, வீட்டையும் வாசலையும் விட்டு, சட்டி பானை, மூட்டை முடிச்சோடு நகரப்பகுதியிலே, தொழிற்சாலை இருக்கும் இடங்களிலே—பெரிய பெரிய தொழிற்சாலை இப் பொழுது அதிகமாக வளர்ந்து கொண்டு வருகிற இந்த நிலையிலே— தொழிற்சாலைகளிலே வேலைக்கு அமருகிறார்கள். மாதம் 70, 75 ரூபாய் என்று வாட்ச்மென் வேலையிலே கூட அவர்கள் பெறக்கூடிய வசதி ஏற் படுகிறது. முந்தி ஒரு வேளை அரிசி சாப்பிட்டுக்கொண்டிருந்த, இரண்டு வேளை கம்பும் கேழ்வரகும் சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் இப்பொழுது மூன்று வேளையும் அரிசிச் சாதம் சாப்பிடுகிறார்கள் என்றால் இதை மறுக்க முடியாது. அந்த அளவுக்கு இப்பொழுது அரிசி அதிகமாக வேண்டி யிருக்கிறது. எவ்வளவு தான் நாம் விளைவித்தாலுங்கூட, மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய அளவுக்கு நெல் விளைவிக்க முடிய வில்லை. அந்த அளவை எட்டவில்லை என்பதற்காக நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டு வந்தோம்.

அதோடு கூட, நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் வகையிலே மிக விரைவிலே ஒரு சட்டம் கொண்டுவரவேண்டும் என்பது அரசாங்கத்தி னுடைய எண்ணம் ஆகும் என்று இங்கே குறிப்பிட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது பல நாட்களாக இந்தச் சட்டசபையிலேயும் வெளியிலேயும் பலவிதமாக, பல கோணங்களி லிருந்து, பல அரசியல் கட்சிகளால், பல நோக்கங்களுடன் பேசப்பட்டு வந்த விஷயம் என்பது எல்லோருக்கும் தெரியும். மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனி இருக்கக்கூடாது, மனிதன் உணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனி இருக்கக்கூடாது என்று பாரதியார் வாக்குக்கு இணங்க, மகாத்மா காந்தி, இந்த நாட்டின் தந்தை அன்று எண்ணினார்; அன்று மக்களுக்கு எடுத்துச் சொன்னார். தனி மனித னுடைய செல்வம் மட்டும் சமுதாயத்திற்குச் சொந்தமாக இருந்தால் மட்டும் போதாது, தனி மனிதனுடைய உழைப்பு மட்டும் சமுதாயத்திற்குச் சொந்தம் என்ற நிலை இருந்தால் மட்டும் போதாது. ஆனால், அவனுடைய அறிவுத் தன்மையும் மக்கள் அத்தனை பேருக்கும் பயன்படவேண்டும் என்று மகாத்மா காந்தி அன்று எண்ணினார். நாட்டிலே, சமுதாயத் திலே சலுகை பெற்ற ஒரு சாரார் இருந்துகொண்டே வந்தார்கள். பல ஆண்டுக் காலமாக சலுகை பெற்று வாழ்ந்தவர்கள் சமுதாயத்திலே ஒரு சாரார் இருக்கிறார்கள். ஆனால், சலுகை இன்னது என்பதையே அறியாத வர்கள், சௌகரியம் இன்னது என்றே அறியாதவர்கள், ஆண்டானுக்கு அடிமையாக, இடைவிடாது உழைத்து, தோலும் நரம்புமாக இருக்கும் தொழிலாளர்கள், நிலத்தோடு நிலமாக பசியாலும் பட்டினியாலும் துடித்துக் கொண்டிருக்கும் தொழிலாளிகள் நாட்டிலே பெருவாரியாக

வாழ்ந்து தான் வருகிறார்கள் ; நிலத்தோடு நிலம் கட்டுண்டு கிடக்கிறார்கள், மாடாக உழைக்கிறார்கள் ; ஓடாய்த் தேய்கிறார்கள் ; கடனுக்கு மேல் கடனைச் சுமந்து கொள்கிறார்கள். மனைவி மக்கள் படும் பாடு ஒரு பக்கம், இருக்க, குழந்தைகள் பள்ளிப் படிப்பு படிக்கவேண்டுமே என்று கூட நினைக்காத இம்மாதிரியான ஒரு கூட்டம் பசியை மாற்றிக் கொண்டால் போதும், பஞ்சம் இல்லாமலிருந்தால் போதும், அரை வயிற்றுக்குக் கஞ்சி இருந்தால் கூட போதும் என்று ஆறுதல் அடையக்கூடிய, வசதி என்பதையே இன்னது என்று தெரியாத மக்கள், சலுகையற்ற மக்கள், கிராமப் புறங்களிலே பெருவாரியாக இருப்பதால், அவர்களுக்குச் சலுகை கொடுத்துத்தான் ஆகவேண்டும், இதுகாறும் சமுதாயத்திலே இருக்கும் சலுகைகளைப் பெற்றவர்கள், இதுகாறும் அரசாங்கத்தினுடைய அரசியல் சந்தர்ப்பத்திலும், சூழ்நிலையிலேயும், இதுகாறும் சகல சௌகரியங்களையும் அடைந்து வந்தவர்கள், இனிமேல் சலுகையற்ற பெருவாரியான மக்களுக்குச் சலுகை கொடுக்க வேண்டும் என்ற சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது, அதைத் தடை செய்ய எந்தச் சக்தி வந்தாலும் முடியாது என்பதை நன்றாக உணர்ந்த அரசாங்கம், காங்கிரஸ் அரசாங்கம், அதை எந்த விதத்திலேயும் நடத்தியே தீர வேண்டும், சோஷலிச சமுதாய பாணியை இந்த நாட்டிலே கொண்டு வந்தே தீரவேண்டும், எத்தனை எதிர்ப்பு வந்தபோதிலும், அதை எதிர்த்து நிற்போம் என்று சவால் விடும் தன்மையிலே மற்ற அரசியல் கட்சிகள் ஏதோ பலவாறு பேசி, முன்னேற்றங்களிலே நாங்கள் போகிறோம் என்று சொல்பவர்கள் கூட பின்தங்கிவிட்டார்கள் என்று சொல்லக் கூடிய நிலைமையில் முன்னோடியாக நிலவுடைமைக்கு உச்ச வரம்பு என்பதை இந்த நாட்டிலே கொண்டுவர முடிவு செய்திருக்கிறது.

நிலத்திற்கு உச்ச வரம்பு என்னும்போது, அதில் பல விஷயங்கள் வருகின்றன. கஷ்டங்கள் இருக்கின்றன. பாதையிலே நடந்து வரும்பொது அதிலேயுள்ள சப்பாத்தி, கல், முள் முதலியவைகளை முதலிலே நீக்கிவிட்டு, அதற்குப் பின்னர் தான், அதை நன்றாக சீரமைக்கப்பட்ட பாதையாக மாற்ற முடியும். முதலிலேயே தார் போட்ட பாதையாகவோ, கான்கிரீட் போடப்பட்ட பாதையாகவோ இருக்க முடியாது. கல், முள் முதலியவைகளை நீக்கிவிட்டுத்தான், அதிலே நாம் நடந்து செல்ல முடியும். அதற்குப் பல நாட்கள் செல்லும். அதுபோல், இன்று நில உடமைக்கு வரம்பு கட்டுகிறோம் என்று சொல்லும்போது, பல தடங்கல்கள் இருக்கின்றன. இன்னல்கள் இருக்கின்றன, பல அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன என்றெல்லாம் சொல்லப்படுகின்றன. பல அடிப்படைக் கொள்கைகளை நாம் கவனத்தில் கொள்ளவேண்டிய அவசியங்கள் ஏற்படுவதினால் அதை ஆலோசித்துச் செய்யவேண்டும் என்ற காரணத்தினாலேயே இங்கே கவர்னருடைய உரையிலே கண்டிருப்பது மிகவும் வரவேற்கத்தக்க அம்சம். நில உடமையை எடுத்துக்கொள்ளும்போது, முதலிலே இதே சட்டசபையிலே சென்ற வருஷத்திலேயும் சரி, அதற்கு முந்தியும் சரி, நிலதானத்தைப்பற்றிய வினோபாஜி கொள்கையை எடுத்துப் பேசினோம். "உலகத்திலுள்ள நிலம் அனைத்தும் உலகநாதன் உடைமையே" என்று வினோபாஜி கூறுகிறார். அந்த நில தானத்தை மக்களிடையே பிரசாரம் செய்து வருகிறார். அந்தப் பிரசாரத்தினாலே மக்கள் மனமாற்றம் அடைந்திருக்கிறார்கள் என்ற விஷயத்தை எடுத்து இந்தச் சபையிலே பேசும்போது, எதிர்த்தரப்பிலே இருக்கின்றவர்கள், இது நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவதற்குக் கண் துடைப்பு வேலையாக இருக்குமோ என்று சந்தேகப்பட்டு, கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள். அதுபோல், அடுத்தபடியாக, விவசாய வருமான வரிச் சட்டம் நாம் கொண்டுவந்தபோது, அப்போதும் இதே மாதிரியாக, நில உச்ச வரம்பு கட்டுவதற்கு இதுவும் ஒரு கண் துடைப்பு வேலையாக காங்கிரஸ் ஆளவந்தார்கள் கொண்டுவந்தார்கள் என்று கூட அவர்கள் அபிப்பிராயங்கள் தெரிவித்தார்கள். இதுபோன்ற கருத்துக்களைப் பத்திரிகைகளிலும் பார்த்தோம். நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவதினால் இந்த நாட்டுக்கு அபாயம்தான் இருக்கிறது என்று பத்திரிகை ஒவ்வொன்றிலும் கருத்து காணப்பட்டது. தனி உரிமை பாதிக்கப்படுகிறது, தனி உரிமையைப் பறிக்கின்றார்கள் என்று பத்திரிகையெல்லாம் பத்தி பத்தியாக எழுதி வந்தன. இன்னும் எழுதிக்கொண்டே வருகின்றன. எவ்விதமான எதிர்ப்பு இருந்த போதிலும், எத்தனை பத்திரிகைகள்

[Srimathi Rajathi Kunchithapatham] [5th February 1959

எதிர்த்து எழுதியபோதிலும், கண் துடைப்புத்தான் என்று எதிர்க்கட்சிக் காரர்கள் நினைத்தபோதிலும், "இது கண் துடைப்பு அல்ல; நிச்சயமாகச் செய்து காட்டுகிறோம்" என்ற முறையிலே இன்று ஆளும் கட்சியார் சார்பி பிலே நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டம் கொண்டுவரப்போவது மிகவும் பாராட்டுதற்குரிய விஷயம். 'வருகிறது, வருகிறது' என்று மக்களை ஏமாற்றிவிடவில்லை; 'வருகிறது வந்தாய்விட்டது'; வந்ததும் மக்களுக்கு ஒன்றும் பயன்படாத வகையிலே வரவில்லை, ஆக்ககரமான முறையிலே, வாழ்க்கை வசதியை நன்றாகச் செய்யக்கூடிய வகையிலே தான் வருகிறது நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டம்.

சுதந்திரம் என்று சொன்னபோது கூட நாம் சுதந்திரம் பெற்று விட்டோம் என்று சமுதாயத்திலே அத்தனை பேர்களும் சந்தோஷித்துவிட வில்லை. சுதந்திரம் வேண்டும் என்று சுதந்திரத்திற்காகப் பாடுபட்டவர்களுக்குத்தான் சுதந்திரம் வந்ததும் சந்தோஷத்தைக் கொடுத்தது. அவர்களுக்குத்தான் சுதந்திரமாகத் தோன்றியது. மற்றவர்களுக்கு, இன்னும் சுதந்திரம் வந்ததாகக்கூட தோன்றவில்லை. அவர்கள் மனதிலே நினைக்கின்ற சுதந்திரம் எப்படி வருகிறதோ, எப்பொழுது வருகிறதோ, அப்பொழுதுதான் அது சுதந்திரம் என்று நினைக்கக்கூடிய வகையிலே மனப் பக்குவம், மன மறுமலர்ச்சிதான் மக்களுக்கு அவசியம் என்ற முறையிலே, வினோபாஜியினுடைய பூதான இயக்கம், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவந்ததன் பலனை இன்று பார்க்கிறோம்—500 ஏக்கர் அளவுக்கு உச்ச வரம்பு கட்டி விட்டால் போதும் என்று முதலிலே நினைத்தவர்கள் கூட, 50 ஏக்கர் அளவுக்கு இருந்தால் போதும், ஐந்து ஏக்கர் அளவுக்கு இருந்தால் போதும் என்ற நிலைமைக்கு பெரிய நிலச் சுவாந்தார்கள் கூட மனமாற்றம் அடைந்திருப்பதுதற்குக் காரணம் கடந்த கால சம்பவங்கள் தான் என்று நான் சொல்லாமல் இருக்க முடியாது. ஆகவே உச்ச வரம்பு கட்டுவதால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. அப்படி ஒரு கோஷத்தைக் கிளப்புவதிலும் பிரயோசனம் இல்லை. உச்ச வரம்பு கட்டுவதினால் எந்த விதத்திலும் உற்பத்தி பாதிக்காது. நிலம் சுருங்குவதினால் உற்பத்தி பாதிக்கும் என்று பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. சுருங்கச் சுருங்க உழைப்பு அதிகமாகும் என்றுதான் பெரிய பெரிய நிபுணர்களும் உற்பத்தியாளர்களும் சொல்லியிருக்கிறார்கள். இதை அவர்கள் ஆராய்ந்துதான் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள். அதன் பிறகுதான் இதை நன்கு எடுத்துக் கூறியிருக்கிறார்கள். ஒருவனுக்கு சிறிய வீடு இருந்தால் அதை அவன் நன்றாக கவனித்துக்கொள்வான். அதற்கு பத்து ரூபாய் வருமானம் வரக்கூடியதாக இருந்தால் அந்த வீட்டை நல்ல முறையில் சீர்படுத்தி பதினைந்து அல்லது பதினாறு ரூபாய் வருமானம் அடைவதற்கு வேண்டிய வசதியை அவன் செய்து கொள்ளுவான். அந்த வீட்டில் ஏற்படக்கூடிய எந்தவிதமான கோளாறுகளையும் அவன் உடனுக்குடன் சீர் செய்து கொண்டு தன்னுடைய வருமானத்தைப் பெருக்கிக்கொள்ள வசதி செய்து கொள்ளுவான். அதைப் போலவேதான் நிலத்தை அதிகமாக வைத்துக்கொண்டிருந்தால் அதில் அவ்வளவு கவனம் செலுத்தாமல் இருப்பார்கள். குறைவாக வைத்துக்கொண்டிருந்தால் அதை நன்றாக கவனித்துக் கொண்டு அதிகப்படியான வருமானத்தைத் தேடிக் கொள்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்ள முற்படுவார்கள். சுமார் ஆயிரம் ஏக்கர் வைத்துக் கொண்டு ஆயிரக்கணக்கான மூட்டை நெல் வருமானம் அடைந்து வந்தால் அந்த நிலத்தைக் குறைத்தால் தனக்கு வருமானமும் குறைந்து விடும் என்ற எண்ணத்தில் இருக்கக்கூடிய நிலத்தை வைத்துக்கொண்டு ஏற்கெனவே வந்த வருமானத்தை அடைவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள அவர்கள் முற்படுவார்கள். அந்த அடிப்படையில் நில உச்ச வரம்பு கட்டுவது அவசியமாக இருக்கிறது. அதிகப்படியான நிலம் இருந்தால் அவைகள் பூராவையும் அதனுடைய சொந்தக்காரரால் கவனித்துக் கொள்ள முடியாது. குறைவாக இருந்தால் அதை நன்றாக கவனித்துக் கொள்வதற்கு வசதியாக இருக்கும் என்ற அடிப்படையில் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது அவசியமாக இருக்கிறது. அதனால் எந்த விதத்திலும் வருமானம் குறைந்து விடாது, உற்பத்தியும் பாதித்து விடாது. எங்கேயெல்லாம் நீர்ப்பாசன வசதி இருக்கிறதோ அவைகளை யெல்லாம் அவன்

பயன்படுத்திக் கொண்டு தன்னுடைய வருமானம் குறையாத அளவில் பார்த்துக் கொள்வான். ஆயிரம் மூட்டை வருகிறவர்களுக்கு நூறு மூட்டை வந்தால் அதனால் கவலை இல்லை. ஆனால் பத்து மூட்டை வரக்கூடியவனுக்கு குறைந்து போனால் அவன் தன்னுடைய சொந்த உழைப்பினால் அந்த வருமானத்தை பதினைந்து மூட்டையாக ஆக்கிக்கொள்ள முற்படுவான். ஆகவே சிறு நிலம் வைத்துக்கொண்டிருந்தாலும் அவன் தன்னுடைய உற்பத்தியை பாதிக்காது. சிறு நிலம் வைத்துக்கொண்டிருந்தால் தான் உற்பத்தியை அதிகரித்துக் கொள்ளலாம். அதனால் உற்பத்தி பாதிக்காது.

இதில் கூட சில உதாரணங்களைக் காட்டலாம். சாதாரணமாக வீடுகளில் காய்கறி தோட்டம் நாம் போட்டுக்கொள்வோம். அவைகளை நன்றாகக் கவனித்து வருவதினால் நாம் அதிகப்படியான பலனை அடைகிறோம். அதில் நாம் எவ்வளவோ சிரத்தை காட்டுகிறோம். அதன் மூலம் நாம் எவ்வளவு பலனை அடைய முடியுமோ அவ்வளவு அடைவதற்கு நாம் பாடுபடுகிறோம். அதைப்போலவேதான் நிலத்திற்கும் உச்ச வரம்பு கட்டினால் அதை வைத்துக்கொண்டு நல்ல உழைப்பு காட்டி வருமானத்தை பெருகிக் கொள்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவதினால் எந்த விதத்திலும் உற்பத்தி பாதிக்காது. பல தரப்பட்ட கோணங்களில் பல தலைவர்கள், ஆராய்ச்சியாளர்கள் நிபுணர்கள் இதை நன்றாக ஆராய்ந்து அதன் பலனாகத்தான் இதை எடுத்து நன்றாகக் கூறியிருக்கிறார்கள்.

அடுத்தபடியாக கூட்டுறவு மூலமாக இந்த விவசாயத்தை நடத்த வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. உச்ச வரம்பு கட்டியபின் மிச்சமுள்ள நிலம் கூட்டுறவுக்கு கொடுப்பது என்று வரும்போது—கூட்டுறவு என்றவுடன் ஒரு பீதி மக்களிடத்தில் தோன்றுகிறது. கூட்டுறவு என்று சொல்லிவிட்டால் அதனாலும் ஒருக்கால் உற்பத்தி பாதித்துவிடுமோ என்ற பயமும் ஏற்பட்டு விடுகிறது. ஏற்கனவே கூட்டுறவு முறையில் நாம் சிக்கிக்கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறோமே இதிலும் கூட்டுறவு முறை வந்தால் இன்னும் எவ்வளவு கஷ்டம் அடைய வேண்டுமோ என்ற பயமும் சிலரிடத்தில் ஏற்படுகிறது. கணக்குக் காண்பிப்பதற்கும் சர்க்கார் அதிகாரிகளிடத்திலும் நாம் மாட்டிக்கொண்டு கஷ்டப்பட வேண்டுமோ என்ற பயமும் ஏற்படுகிறது. சர்க்காருடைய அதிகாரிகளிடத்திலிருந்தும், சர்க்கார் சட்ட திட்டங்களிலிருந்து எப்பொழுது விடுபடப்போகிறோம் என்று நினைத்துக்கொண்டிருக்கும்போது இது வேறு வருகிறதே என்றும் பயப்படுகிறார்கள். இந்தக் கூட்டுறவு முறையில் எங்கே தங்களுடைய பிழைப்பு போய்விடுமோ என்றுகூட பயப்படுகிறார்கள். தங்களுடைய வருமானம் குறைந்து விடுமோ, அல்லது ஆயிரம் அல்லது ஐந்நூறு ஏக்கர் வைத்துக் கொண்டிருக்கிறவர்களிடம் வேலை செய்துவிட்டு கூலியைக் கேட்கும்போது பல கஷ்டங்கள் இருந்தாலும் ஏதாவது கெஞ்சிக் கேட்டாவது தங்களுடைய தேவைக்குத் தக்கபடி வாங்கிக்கொள்ளலாம் என்று இருந்தது போக இப்பொழுது அதிகாரிகளிடத்தில் போய் மாட்டிக்கொண்டு அவர்களுடைய சட்ட திட்டங்களுக்குட்பட்டு வேலை செய்து பயன் அடைய வேண்டியதாக இருக்குமே என்றுகூட பயப்படுகிறார்கள். இதற்கு முன்பு ஒரு முதலாளியிடத்தில் வேலை செய்துவிட்டு கூட்டுறவு முறை வந்தால் பல அதிகாரிகளாகிய பல முதலாளிகளிடத்தில் இருந்து வேலை செய்ய வேண்டியதாக இருக்குமோ என்றும் பயப்படுகிறார்கள். நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் தங்களுடைய நிலங்களை கூட்டுறவு சங்கத்திற்கு விற்று விட்டு அதில் வேலை செய்ய வேண்டியதாக இருக்குமோ என்றும் பயப்படுகிறார்கள். பட்டா பாத்தியதை இல்லாதவர்களைப்போல் பட்டா பாத்தியதை உள்ளவர்களும் வேலை செய்ய வேண்டியதாக இருக்குமோ என்றுகூட பயப்படுகிறார்கள். ஒரு முதலாளியிடம் இருந்து வேலை செய்து வந்ததை விட்டுவிட்டு பல முதலாளிகளாகிய கூட்டுறவு சங்க டைரெக்டர், சூப்பர்வைசர், இன்ஸ்பெக்டர் போன்றவர்களிடத்தில் வேலை செய்ய வேண்டியதாக இருக்குமே என்றும் பயப்படுகிறார்கள். நிலத்திற்கு விலை கொடுப்பதைப் பொறுத்து அவர்களுடைய வருமானத்தை நிர்ணயம் செய்யப் போகிறார்களா என்றும் அஞ்சுகிறார்கள். நிலத்தினுடைய மதிப்பைப் பொறுத்து விலை கொடுக்கப்படப்போகிறதா அல்லது அதிலிருந்து வரக்

[Srimathi Rajathi Kunchithapatham] [5th February 1959

கூடிய வருமானத்தைப் பொறுத்து விலை கொடுக்கப்படப்போகிறதா என்ற இப்படிப்பட்ட பல பிரச்னைகள் இதில் எழுகின்றன. இப்படிப்பட்ட பல பிரச்னைகள் விவசாயம் செய்யும்பொழுது வரும் என்று எதிர்பார்த்துத்தான் கவர்னர் அவர்கள் தங்களுடைய உரையில் இதைப்பற்றி மிக தெளிவாக கூறியிருக்கிறார். அதாவது

> ". . . . . . . . உற்பத்தி எந்த விதத்திலும் பாதிக்காமல் இருக்கும் வகையிலே சில முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டி உள்ளது. வேளாண்மைப்பகுதியில் உள்ள கூட்டுறவு இயக்கங்களை வலுப்படுத்தவும், புதியக் கூட்டுறவு அமைப்புகளை ஏற்படுத்தவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன."

என்று குறிப்பிட்டிருக்கிறார். இப்பொழுதுள்ள கூட்டுறவு திட்டத்தில் எப்படிப்பட்ட சட்ட திட்டங்கள் இருந்தாலும் அதை மாற்றி அமைக்க வேண்டியதாக இருக்கிறது. நிலைமை எப்படி இருந்த போதிலும் கூட்டுறவு அமைப்பை மாற்றி அமைக்கவேண்டிய சந்தர்ப்பம் வந்தாலும் அதை மாற்றி அமைத்துத்தான் தீரவேண்டும். அந்த அம்சத்தில் கவர்னர் அவர்களுடைய உரை இருப்பது வரவேற்கத்தக்கது தான்.

அடுத்தபடியாக நில உற்பத்தியையும், அதன் செலவையும் நிர்ணயம் செய்யவேண்டும். அப்படிச் செய்யும்போது நிலத்தின் தரம் ஒரு இடத்தில் உள்ளது போன்று மற்ற இடங்களில் இருக்காது. ஒரு இடத்திற்கு மற்றொரு இடமும் ஒரு மாவட்டத்திற்கு இதர மாவட்டமும் வித்யாசப்படும். தாலூகாவிற்குத் தாலூகாவும் வித்யாசமாகத்தான் இருக்கும். ஆகவே உச்ச வரம்புச் சட்டம் கொண்டு வரும்போது அந்தந்த மாவட்டங்களை ஒரு அடிப்படையாக வைத்துக்கொண்டு வரக்கூடாது. கொண்டு வரவும் முடியாது. நிலத்தின் தரத்தை பொறுத்து இருக்கிறது. சாதாரணமாக தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொண்டால் அங்குள்ள நிலத்தின் தரமும் மற்ற இடங்களில் உள்ள நிலங்களின் தரமும் வித்யாசமாக இருக்கும். தஞ்சையிலுள்ள நிலம் வருஷம் ஆயிரம் அல்லது ஐந்நூறு ரூபாய் வருமானம் தரக்கூடிய நிலமாக இருக்கும். அதைப்போலவே மற்ற இடங்களிலும் எதிர் பார்க்கவே முடியாது. அதைப்போலுள்ள நிலங்கள் ராமனாதபுரம் ஜில்லாவிலும் பஞ்சப் பிரதேசமாகிய திருநெல்வேலி ஜில்லாவிலும் எதிர் பார்க்க முடியாது. ஆகவே உச்ச வரம்பு கட்ட சட்டம் இயற்றும் போது இதையும் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியம். திருநெல்வேலி போன்ற இடங்களில் ஆயிரம் ரூபாய் ஒரு வருஷத்தில் வருமானம் அடைவதாக இருந்தால் சுமார் பத்து வருஷங்கள் காத்திருக்க வேண்டியதாக இருக்கும். அதனால் மாவட்டத்தின் தரத்தைப் பொறுத்து உச்ச வரம்பு கட்ட வேண்டும்.

அதோடு கூட உற்பத்திச் செலவு என்ன ஆகிறது என்பதையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு இடத்தில் 3 முதல் 6 அணாவிற்கு கூலி கிடைக்கலாம். மற்ற இடங்களில் ஒரு ரூபாய் 12 அணா கொடுத்தாலும் கூலி கிடைப்பது அரிதாக இருக்கும். அந்த நிலைமையையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இம்மாதிரி செலவையும் கணக்கில் எடுத்துக்கொண்டு உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட பல சிக்கலான பிரச்னைகள் இருப்பதால்தான் அவைகளை கவனித்து சட்டம் கொண்டு வர வேண்டியதாக இருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் அரசாங்கத்திற்கு இப்படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டு வரவேண்டுமென்ற எண்ணம் இருந்தாலும்கூட உற்பத்தி பாதிக்காத அளவில் கொண்டு வரவேண்டும் என்பதாகவும், புதிய அமைப்பில் கூட்டுறவு இயக்கத்தை நடத்தவேண்டும் என்ற எண்ணத்தாலும் தான் இந்தப் பிரச்னையை நன்றாக யோசித்துக்கொண்டு வரவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதையேதான் நமது கனம் முதல் அமைச்சர் அவர்கள் பல இடங்களில் இதைப்பற்றி பேசிக்கொண்டு வருகிறார். அதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்துகொண்டுதான் அந்தச் சட்டத்தைக் கொண்டுவரவேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறார். உற்பத்திக்கு பாதகம் வராத முறையில் கூட்டுறவு முறையை அமைக்க வேண்டியதாக

5th February 1959] [Srimathi Rajathi Kunchithapatham]

இருக்கிறது. இதையேதான் கவர்னர் அவர்கள் தங்களுடைய உரையில் கூறியிருக்கிறார். ஆகவே கூட்டுறவு அமைப்பை மாற்றி அமைத்துக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஐந்து வருஷ திட்டத்தை எடுத்துக்கொண்டால் அதற்கு என்று 152 கோடி ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். அண்மையில் பார்த்தால் அந்த மாநிலங்களில் கொடுக்கப்பட்ட தொகையையே செலவு செய்யாமல் அப்படியே வைத்துக்கொண்டிருப்பது தெரிய வரும். ஆனால் நமக்குக் கொடுத்த 152 கோடி ரூபாயில் 90 கோடி ரூபாயை நாம் செலவு செய்து விட்டு இன்னும் கொடுத்தாலும் செலவு செய்ய தயாராகவும் இருக்கிறோம் என்று சவால் விடுவதுபோல் இன்னும் செலவு செய்ய தயாராக இருக்கிறார்கள் நமது அரசாங்கம். இது நமக்கு பெருமைக்கு உரியதாக இருக்கிறது. இது பெருமைபடக்கூடிய ஒரு விஷயமாகும்.

அடுத்தபடியாக சமுதாய நல திட்டம். சமுதாய நல திட்டத்தை எடுத்துக்கொண்டால், லோகல் டெவலெப்மெண்ட் வொர்க்ஸ் என்று நமக்குக் கொடுக்கப்பட்டிருந்த திட்டம் மிகவும் பயனுள்ளதாக இருந்தது. தேசீய அபிவிருத்தி பிரதேசத்தில் நடந்திருக்கக்கூடிய வேலையைப்பார்த்தும் லோகல் டெவலெப்மெண்ட் வொர்க்ஸ் பிரதேசங்களில் நடந்திருக்கக் கூடிய வேலைகளையும் பார்த்தால் தேசீய அபிவிருத்தி திட்டப் பிரதேசங்களில் வேலைகள் அவ்வளவு நன்றாக நடைபெற்றதாகத் தெரியவில்லை. தேசீய அபிவிருத்தி திட்ட பிரதேசங்களில் மக்களுடைய ஒத்துழைப்பு இருக்கக்கூடிய இடங்களில் வேலைகள் நன்றாக நடைபெற்றிருக்கிறது. அவர்களுடைய ஒத்துழைப்பு இல்லாத இடங்களில் வேலை அவ்வளவு நன்றாக நடைபெற்றதாகச் சொல்ல முடியாது. வரட்சியான பிரதேசங்களில் மக்களுடைய ஒத்துழைப்பு ஐம்பது சத விகிதம் இருந்திருக்கிறது. அந்த இடங்களில் தான் வேலைகள் முன்னேற்றமடைந்திருக்கிறது, மற்ற இடங்களில் முன்னேற்றமடையவில்லையென்றுகூட சொல்லலாம். நாம் எதிர்பார்த்த அளவிற்குத்தான் முன்னேற்றமடையவில்லையே தவிர கொஞ்ச அளவில் தான் முன்னேற்றமடைந்திருக்கிறது. ஸ்தல ஸ்தாபன வேலைகள் நடக்கக்கூடிய இடங்களில் ஒரு வருஷத்தில் செய்யக்கூடிய வேலைகளைச் செய்துவிட்ட காரணத்தால் ஸ்தல ஸ்தாபன வேலைகளையே மறுபடியும் அவர்கள் நமக்குக் கொண்டு வந்தால் அது நமக்கும் மக்களுக்கும் உபயோகமாக இருக்கும் என்று கூறிக்கொள்ளுகிறேன்.

மத்திய அரசாங்கம் அரைப்பங்கும் நமது அரசாங்கம் கால் பங்கும் போட்டு ஸ்தல ஸ்தாபன வேலை திட்டத்தை மறுபடியும் கொண்டு வந்தால் தேசீய அபிவிருத்தி திட்ட வேலை முன்னேற்றமடைவதை விட பன்மடங்கு அதிகமாக முன்னேற்றமடையும் என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஸ்தல ஸ்தாபன வேலை திட்டம் சம்பந்தமாக சிறு சிறு கிராமங்களுக்கும் இப்பொழுது ரோடு வசதிகள் ஏற்பட்டிருக்கிறது, பாதை வசதி ஏற்பட்டிருக்கிறது, இப்படி எவ்வளவோ பல நன்மைகளைச் செய்ய முடிந்திருக்கிறது என்பதை நாம் மறக்கவே முடியாது. அந்த அளவுக்கு சமுதாய அபிவிருத்தி பிரதேசங்களில் ஏற்படவில்லை. இந்த நிலைமையை நாம் பார்க்கிறோம்.

அடுத்தபடியாக பாசன திட்டங்கள், மின்சார வசதிகள் முதலியவை களைப்பற்றி சொல்லும்போது நம்முடைய மின்சார அபிவிருத்தி எவ்வளவோ முன்னேறி இருக்கிறது என்று சொல்லலாம். எல்லோரும் சேர்ந்து பாராட்டக்கூடிய விஷயம் இது. இப்பொழுது நாம் அதிகமாக 1,200 கிராமங்களுக்கு மின்சாரத்தைக் கொடுக்க முடியும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இத்துடன் இப்பொழுது சுமார் 8,000 கிராமங்களுக்கு மின்சார வசதி கொடுக்கப்பட்டதாக எண்ணிக்கை பெருகும். இதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதுதான். போன வருஷத்தில் மின்சார விநியோகத்தில் வெட்டு ஏற்பட்டது. ஆனால் இந்த வருஷம் அப்படிப்பட்ட வெட்டு ஏற்படாது என்றும் சொல்லப்படுகிறது. தேக்கங்களில் தண்ணீர் குறைந்தாலும் வெட்டு இருக்காது என்று சொல்வதானது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷயம்தான்.

[Srimathi Rajathi Kunchithapatham] [5th February 1959

10.40 a.m. ஆனால் இந்த நிலைமை நீடித்து இந்த மாதிரி "கட்" ஏற்படாமல் இருக்க வசதி செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நம்முடைய மாகாணத்தில் அதிகமான ப்ராஜக்டுகள் இப்பொழுது ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. பெரியாறு ப்ராஜக்ட் ஆரம்பித்து இருக்கிறோம். குந்தா திட்டமும் கணிசமான அளவு முன்னேற்றம் அடைந்து கணிசமான அளவு பலன் தர ஆரம்பித்து இருக்கிறது. இதன் மூலம் கோயம்புத்தூர் பகுதியில் சுமார் 2½ லட்சம் ஏக்கருக்குப் பாசன வசதி கிடைக்கும். எங்களுக்கும் ஒரு பரம்பிக்குளம் வேண்டுமென்று இங்கே கூறிக்கொள்ள விரும்புகிறேன். பரம்பிக்குளத்திட்டத்தினாலும் 2½ லட்சம் ஏக்கர் பாசன வசதி பெறும். இது போன்ற திட்டங்கள் நம்மிடம் அதிகமாக உண்டு. பரம்பிக்குளம் திட்டத்தினால் எங்களுடைய பகுதியான திருநெல்வேலி, ராமநாதபுரம் பகுதிகள் கூட நல்ல பயன்பெற முடியும். பரம்பிக்குளம் இல்லாவிட்டாலும், பம்பையாறுத் திட்டம் இருக்கிறது. இந்தப் பம்பையாறு திட்டத்தை நிறைவேற்ற எஞ்சினீர்கள் ஆலோசனை செய்து "ஸ்பெஷல் டிவிஷன்" ஏற்படுத்தி இந்தத் திட்டத்தை நிறைவேற்றினால், திருநெல்வேலி, ராமநாதபுரம் பகுதிகளிலுள்ள அத்தனை நிலங்களுக்கும் பாசன வசதி கிடைக்க வாய்ப்பு ஏற்படும் என்பதையும் இந்த நேரத்தில் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

தென் மண்டலக் குழுவானது நாம் இங்கே விளைவிக்கிற உணவு தானியங்களைக் கேரளத்திற்குத் தடங்கல் ஏதுமின்றி போக வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தது. இங்கே நிலவளம் இருக்கிறது. கேரளத்தில் நீர் வளம் இருக்கிறது. இவர்களுக்கு மலைவளம் இருக்கிறது. நமக்கு மலை வளம் இல்லை. அவர்களிடம் இருக்கக்கூடிய நீர் வளத்தினால் அவர்கள் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியாது. உணவு, தானியங்களை நம்மிடம் இருந்துதான் அவர்கள் பெற்றாக வேண்டும். பெற்றுக்கொண்டு வருகிறார்கள். தென் மண்டலக் குழுவானது "உணவு தானியம் கட்டுப்பாடு இல்லாமல் ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் போய் வரவேண்டும்" என்று சொன்ன பிரகாரம், நெல்லையில் மிகவும் நல்ல உற்பத்தி காண்பித்த போதிலும், ரூபாய் 50-லிருந்து 60 வரை 2 மூட்டை நெல்லின் விலை உச்ச வரம்பை எட்டி விட்டது. இந்தத் தென் மண்டலக் குழுவானது, போக்குவரத்துத் தடங்கல் இல்லாமல் எப்படி உணவு தான்யங்கள் தடங்கல் இல்லாமல் சாதாரணமாகப் போவதற்கு ஒத்தாசையாக இருந்து வருகிறதோ, அதே போல உற்பத்திக்கு வேண்டிய சாதனங்கள் தடங்கல் இல்லாமல் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போக வர வசதி ஏற்படுத்திக்கொடுக்க வேண்டும். மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகும் தண்ணீர் நமக்குத் தடங்கல் இல்லாது கிடைத்தால் தான் நாம் இங்கு உணவு தானியங்களை உற்பத்தி செய்து அனுப்ப முடியும். உணவு உற்பத்தி செய்வதில் நமக்குத் தடங்கல் இல்லாத வகையில் தென் மண்டலக்குழு ஆலோசனை செய்து நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் துறையைப் பொறுத்தமட்டில் நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டத்தைப் பற்றி நாம் பெருமைப் படாமல் இருக்க முடியாது. 2½ லட்சம் கிலோவாட் மின்சார சக்தியை அங்கு உற்பத்தி செய்ய முடியும். உர உற்பத்தியும் செய்யப்படுகிறது. இதுதான் தென்னாட்டிலேயே வரப் பிரசாதம் போன்ற ஒரு பெரிய திட்டம் என்று பெருமைப்பட ஒரு வாய்ப்பைக் கொடுத்தது. கோமகனாரைக் கூட்டிக் கோயில்களை மட்டும்தான் காட்ட முடிகிறது. டிட்டோவை அழைத்து திருமலை நாயக்கர் மகாலை மட்டும்தான் காட்ட முடிகிறது என்பதல்லாமல், இப்படிப்பட்ட மாபெரும் திட்டங்களையும் நாம் வெற்றிகரமாக நடத்தி வருகிறோம் என்பது நாம் பெருமைப்படத்தக்க விஷயமாகும்.

தொடக்கப் பள்ளிகளின் பாடத் திட்டங்களைப் மாற்றி அமைக்கும் பணி ஏற்கனவே தொடங்கி விட்டது. உயர்நிலைப்பள்ளிகளில் பாடத்திட்டங்களை மாற்றி அமைக்கும் வேலையும் அடுத்த கல்வி ஆண்டிலிருந்து மேற்கொள்ளப்படும். ஏழைக் குழந்தைகளுக்கு நன்பகல் உணவு அளிக்கும் திட்டம் பொது மக்களின் ஆதரவை நன்கு பெற்று வருகிறது. இத்திட்டம்

5th February 1959] [Srimathi Rajathi Kunchithapatham]

இப்போது 11,000 தொடக்கப் பள்ளிகளில் நடைபெற்று வருகிறது. மூன்றரை லட்சம் குழந்தைகள் இதனால் பயன் அடைகிறார்கள் என்றெல்லாம் கவர்னர் உரையில் இடம் பெற்றிருக்கும் விஷயங்கள் நாம் பெருமைப் படத்தக்கவை, பாராட்டத்தக்கவை. சமீபத்தில் வெளியான செய்திகளில் இருந்து சில வருத்தப்படத்தக்க விஷயம் ஆரம்பப் பள்ளிகளைப் பொறுத்தமட்டில் ஏற்பட்டிருக்கிறது என்பதைக் கூற விரும்புகிறேன். அதாவது தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிகளில் பள்ளிகளை நடத்துவதற்காக சிறு தொகையை மாணவர்களிடமிருந்து வசூலிக்கிறார்கள். அவ்வாறு மாணவர்களிடமிருந்து சம்பளம் வசூலிக்கும் பள்ளிகளுக்கு அரசாங்கம் க்ரேனட் கொடுக்காது என்று செய்தி வெளியாகியுள்ளது. இவ்வாறு செய்வதினால் ஏழை, நடுத்தர மாணவர்களின் படிப்புதான் கெடும். ஏனெனில், அரசாங்கத்தின் க்ரேனட் நின்றுவிட்டால், தனிப்பட்டவர்களால் பள்ளிகளை நடத்த முடியாமல் மூடிவிட நேரிடும். அல்லது சம்பளத்தை உயர்த்த வேண்டி நேரிடும். மாணவர்களின் படிப்பு கெடுவதுடன் ஆயிரக் கணக்கான ஆசிரியர்கள் வேலையின்றி வாட வேண்டிய நிலையும் ஏற்படும். இதன் காரணமாகச் செல்வமுடையோரும், வசதியுடையோரும்தான் கல்வி வசதியையும் பெற முடியுமே தவிர, ஏழை மாணவர்களாலும், நடுத்தர மாணவர்களாலும் பெறமுடியாது. ஆகவே இந்த ஆரம்பப்பள்ளிகளுக்கும் க்ராண்டை நிறுத்தக்கூடாது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். இந்த விஷயத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இதற்கு ஏதோ ஒரு வசதி செய்து கொடுக்கப் போகிறோம் என்று கூறிய கருத்தை நேற்றைய பத்திரிக்கையில் பார்த்தேன். இது மிகவும் மகிழ்ச்சிக்குறிய விஷயம்.

அடுத்தப்படியாக என்.ஜி.ஓ. பிரச்சனை. இப்போது அவர்களுக்கு 5 ரூபாய் இடைக்கால நிவாரணமாக அளிக்க சர்க்கார் முன் வந்திருப்பதை கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருப்பது பாராட்டக்கூடிய விஷயம். மத்திய சர்க்கார் 1½ கோடியும், நமது மாநில சர்க்கார் 1½ கோடியும் போட்டு ரூபாய் 5-ம், ரூபாய் 7-ம் கூட்டி ரூபாய் 12 கொடுத்துக் கொண்டு வருகிறோம். இப்போது ரூபாய் 5 கொடுக்கப் போகிறார்கள். அவர்களுக்குச் சம்பளம் அதிகமாகக் கொடுக்க வேண்டியதுதான். என்.ஜி.ஒ.க்கள் நடுத்தர வர்கத்தைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள். இன்றைக்கு விலைவாசிகளின் உயர்ந்த நிலையைப் பார்க்கிறபோது அதனால் நடுத்தரக் குடும்பங்கள்தான் அதிக அவதிக்குள்ளாகியிருக்கிறார்கள். ஒருவன் ரூபாய் 150 சம்பளம் வாங்கினாலும் தன் குடும்பதை வைத்துத் தாங்க முடியவில்லை. இதை யாரும் மறுக்க முடியாது. ஆகவே என்.ஜி.ஒ.க்களுடைய வாழ்க்கை நிலையை உயர்த்த வேண்டியதுதான். ஆனால் அதேசமயத்தில் என்.ஜி.ஒ.க்கள் தொழிற் சங்கங்களைப்போல சங்கம் அமைத்துக் கொண்டு சர்க்காரை மிரட்டுவதும், ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுப்பதும் சரியாகாது. தொழிற் சங்கங்கள் இம்மாதிரி செய்யலாம். அது நியாயமும் கூட. தொழிலாளர்களுடைய உழைப்பை உறிஞ்சி, தனிப்பட்ட முதலாளிகள் கோடீஸ்வரனை ஆக்கக்கூடிய நிலைமை அது. தங்கள் வசதிக்காக, தங்கள் உரிமைக்காக, தனிப்பட்ட முதலாளிகளிடத்தில் வேலை செய்யும் தொழிலாளர்கள் செய்வது நியாயமானது. ஆனால் அந்த மாதிரியாக சர்க்காரில் வேலை செய்கிறவர்கள் தொழிற்சங்கம் போன்று அமைத்துக் கொண்டு சர்க்காரை பயமுறுத்துவதும், ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுப்பதும் விரும்பத்தக்கது அல்ல.

10-50 a.m.

அதே சமயத்தில் இன்னொன்று. இப்போது இருக்கும் நிலைமையில் சர்க்கார் ஊழியர்களுடைய எண்ணிக்கை அதிகமாவதனால் அந்த பாரம் அதிகமாக இருப்பதினால் பல தொல்லைகள். ஊழியர்களுடைய எண்ணிக்கை அதிகமாக அதிகமாக வேலை திறன் நன்றாக இல்லை என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். ஒரு பேப்பரோடு நாம் தொடர்ந்து போகிறோம் என்றாலும் கூட "ஒரு அதிகாரியிடத்தில் ஐயா எங்கள் ஊரிலிருந்து இன்ன விஷயமாக இன்ன பேப்பர் வந்திருக்கிறதே. அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?" என்று கேட்டால் அந்தப் பேப்பர் இங்கே வரவில்லையே என்கிறார். பத்து நாட்கள் முன்பாகவே அந்தப் பேப்பர் அவர்களிடத்தில் வந்து இருக்கும். இருந்தாலும் அந்தப் பேப்பர் வரவில்லை வரவில்லை என்று ஐந்தாறு தடவைகள் அலக்கழிக்

[Srimathi Rajathi Kunchithapatham] [5th February 1959

கிறார்கள். இது மிகவும் வருத்தப்படக்கூடிய விஷயம். சர்க்கார் ஊழியர்கள் தங்கள் பொறுப்பை நன்றாக உணர்ந்து கொள்ளும்படி செய்ய வேண்டும். உரிமைக்காக, வசதிக்காக அவர்கள் போராடுவது என்கிற போக்கில் மட்டும் போகக்கூடாது. நாட்டின் உற்பத்தி பெருகப் பெருக அவர்களுக்கு நிறையச் சம்பளம் கொடுப்பது இடஞ்சலாக இருக்காது. இதை சர்க்கார் ஊழியர்கள் மனதில் வைத்து கொண்டு தொழிற்சங்கம் போன்று மிரட்டல், பயமுறுத்தல் காரியங்களில் இறங்காது, தங்கள் வேலைகளைச் செம்மையாகச் செய்யும்படி சர்க்கார் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தப்படியாக கவர்னர் தம் உரையில் இந்த மாநிலத்தில் உள்ள சகல கட்சிகளினிடையேயும், "அரசியல் கொள்கைகளிலே காணப்படும் முரண்பாடுகளுக்கிடையே இம்மாநில மக்களின் நலனை வளர்ப்பதிலே ஓர் அடிப்படையான ஒற்றுமை உணர்ச்சி நிலவுவதைக் கண்டு மிக்க மகிழ்ச்சியும், அளவற்ற ஆறுதலும் அடைந்தேன்" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அது குறித்து நாம் எல்லோரும் பெருமைப்படவேண்டும்.

பல் குழுவும் பாழ் செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல் குறும்பும் இல்லது நாடு

என்கிற வள்ளுவனாரின் வாக்குக்கேற்ப இந்நாட்டில் பல்குழுக்கள் இருந்த போதிலும் நாடு இழிந்த நிலைக்குப் போய்விடாது காப்பாற்றப்பட்டது நமக்குப் பெருமைதான். நமக்குள் பாதை வித்யாசமாக இருக்கலாம். ஆனால் எல்லோருக்கும் முடிவு ஒன்றே என்ற நிலைமையில் ஜனநாயகப் பண்பிலே ஜனநாயகப் பாதையிலே நல்லதொரு பண்பாட்டை நாம் வளர்த்துக்கொண்டிருக்கிறோம். அதன் காரணமாகவே அரசியல் கட்சிகள் அத்தனையும் நாட்டின் மேன்மைக்காக ஒத்துழைத்திருக்கின்றன.

ஒன்று பட்டால் உண்டு வாழ்வு—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வே

என்கிற சரித்திரத்தை நன்று தெரிந்து கொண்டிருக்கிறோம். ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கு எளிது என்கிறதை நாம் உணராமல் இல்லை.

ஆரியக்கூத்தாடினாலும் தாண்டவக்கோனே காரியத்தில் கண் வையடா தாண்டவக்கோனே என்பதாக நாட்டின் முன்னேற்றம் என்ற ஒரு காரியத்திலேயே நாம் கண்ணாக இருந்திருக்கிறோம். இதைப்பற்றி கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருப்பதும் நாம் எல்லோரும் பெருமை அடைய வேண்டிய விஷயம்.

இருந்தபோதிலும் சட்ட மன்றத்தில் கவர்னர் உரை நிகழ்த்தும்போது எதிர் கட்சியைச் சேர்ந்த திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அதை பகிஷ்கரித்திருக்கிறார்கள். கவர்னர் உரை நிகழ்த்தும்போது சபைக்கு வராது இருந்தவர்கள் அதன்மேல் நடைபெறும் விவதாத்திற்கும் வராமல் இருந்திருந்தால் அர்த்தம் உண்டு. உரை நிகழ்த்தும்போது இருக்கமாட்டோம். ஆனால் அவர் உரையைப்பற்றி நாங்களும் விவாதிப்போம் என்கிற அவர்கள் கொள்கை சரியாகாது. போன ஆண்டு மத்திய அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட கவர்னர் அவர்களின் உரையை பகிஷ்கரிக்கிறோம் என்கிறார்கள். அப்படியானால் மத்திய சட்டசபையிலே உறுப்பினராக டெல்லியில் இருந்து மத்திய அரசாங்கம் கொடுக்கிற **travelling allowance, daily allowance** எல்லாம் வாங்கிக்கொள்ளலாமா என்று நமக்குத் தெரியாது.

ஊட்டியில் சட்டசபை கூட்டம் நடத்தப்போவதாக அரசாங்கம் குறிப்பிட்டிருப்பதை ஆட்சேபித்து கவர்னர் உரைக்கு அவர்கள் வரவில்லை என்பதான செய்தி ஒன்றையும் நேற்று நான் பார்த்தேன். இது உண்மையானால் ஆச்சரியப்படவேண்டிய விஷயம். சேலத்தில் வைப்பதாலோ கோவையில் வைப்பதாலோ, ஊட்டியில் வைப்பதாலோ நாட்டுக்கு என்ன தீமை? வெள்ளைக்காரர்கள் காலத்தில் ஒவ்வொருவருக்கும் மூவாயிரம், நாலாயிரம் சம்பளம். மூன்று மாதம் செக்ரடேரியட் ஊட்டியில் இருந்தது. அதுவும் அங்கே ஸ்பென்சர் கம்பெனி, பி.ஆர். அண்டு சன்ஸ்

5th February 1959] [Srimathi Rajathi Kunchithapatham]

கம்பெனி என பல வெள்ளைக்கார முதலாளிகளின் கம்பெனி ஸ்தாபனம் அங்கே. இப்படி நாட்டு மக்களுடைய பணத்தை வெள்ளையர்கள் சுரண்டி தங்கள் நாட்டுக்கு எடுத்துப்போனார்கள். அதைக்கண்டித்து இப்படி ஊட்டியில் உல்லாசம் செய்கிறார்களே, நம் நாட்டைச் சுரண்டுகிறார்களே என காங்கிரஸ்காரர்கள் எதிர்த்தார்கள். ஆனால் இன்றைக்கு மந்திரிகளின் சம்பளம் என்ன? ஊட்டியில் உள்ளவர்கள் நம் மக்கள் இல்லையா? அவர்கள் வளம் பெற வசதி செய்ய வேண்டாமா? ஊட்டியில் கூட்டம் நடத்துவதால் இங்குள்ளவர்களில் யார் பொதுமக்கள் பணத்தைச் சுரண்டி வெளிநாட்டுக்கு எடுத்துப்போகப் போகிறார்கள். அதுவும் ஊட்டிக்குச் சென்று நமது மந்திரிமார்கள் உல்லாசம் செய்யக்கூடிய நிலைமையில் இருக்கிறார்களா? கூட்டத்தை அங்கே நடத்துகிறோம் என்றால் அந்தப் பகுதி வளம் பெறும். அங்குள்ள வியாபாரம் பெருகும். நாம் போவதால் அங்குள்ளவர்களுக்கு அதிக ஊக்கம் ஏற்படும் எனத்தான் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. ஊட்டியில் இருந்து திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு ஆதரவு கிடைத்திருந்தால் இவர்கள் அப்போது என்ன சொல்வார்களோ? இவர்கள் கேட்கிற திராவிட நாட்டில் ஊட்டி சேர்ந்தது இல்லையா? மலை என்று விட்டுவிட்டார்களா? இவர்கள் குறிப்பிடுகிற திராவிட நாட்டில்தான் ஊட்டி இருக்கிறது. ஊட்டியில் கூட்டம் நடத்துவதனால் 50 ஆயிரம் ரூபாய்தான் செலவாகிறது. இவர்கள் நினைக்கிறபடி அதிகம் இல்லை. அதோடு பணம் சுரண்டப்பட்டது வேறு எங்கும் போகவும் போகாது. நம் நாட்டின் ஒரு பகுதி வளம் பெறலாம். அவ்வளவு தான். ஊட்டி போவதற்கு ஆகக்கூடிய ஐம்பதாயிரம் ரூபாய் செலவை என்.ஜி.ஓ. க்களுக்கு மூன்று லட்சம் பேருக்குப் பிரித்துக்கொடுத்தால் நலமாக இருக்கும் என்று பேசுகிறார்கள். அப்படி பிரித்துக்கொடுத்தால் ஒரு ஊழியருக்கு 16 நயா பைசா கூட கிடைக்காது. இந்த நிலைமையில் பார்த்தால் ஊட்டிக்கு போவதில் ஒன்றும் அதிகப்படியான செலவு ஆகி விடாது. இதைக்கொண்டு என்.ஜி.ஓக்களுக்கு ஒன்றும் பிரித்துக்கொடுத்துவிட முடியாது. நாட்டின் நன்மைக்காக சென்ற வருஷத்தைப்போல இந்த வருஷமும் ஒத்துழைப்பு மனப்பான்மையுடன் நடந்துக்கொள்ள வேண்டும், உறுதி கொள்ள வேண்டும். என்று கூறிக்கொண்டு இந்த கவர்னர் உரையை ஆதரித்து, இந்த நாட்டின் குறைகளை போக்குவதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்று குறிப்பிட்டிருப்பதை மனதில் கொண்டு பணிபுரியவேண்டும் என்று கூறி என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

11 a.m.

* Sri T. T. DANIEL : Mr. Deputy Speaker, Sir, the Governor's Address contains some redeeming features. We are really happy to note that out of the targeted amount of Rs. 152 crores for the Second Five-Year Plan, Government will be spending Rs. 90 crores by the end of this year. If the same progress is to be kept up, we will exceed the target limit of the Second Five-Year Plan. It is gratifying to note that our Government have successfully tackled the question of sharing the Parambikulam waters with the Kerala Government. I must take this occasion to congratulate the Government on the dexterous manner in which they have arrived at a very happy, mutually beneficial and satisfactory settlement with the Kerala Government in sharing the waters of the rivers of the Anamalais and the Parambikulam. It is interesting to note that preliminary works under the project estimated to cost about Rs. 30 crores have been started and that nearly 2,50,000 acres of land in Coimbatore district will be brought under this project. It is also seen from the Governor's Address that the Kundha project is progressing satisfactorily. It is stated in the Address that the policy of the Government is to provide electricity for all villages in the State as early as possible and that under the current year 1,200 more villages will get the benefit of electricity. It is gratifying to

note that the Neyveli Lignite Project is progressing to plan and that negotiations with the Russian Government for setting up a thermal plant of 250,000 KW are nearing completion and that preliminary works have commenced.

In the Governor's Address it is stated that the scheme for giving midday meals for school children is in vogue in 11,000 elementary schools and nearly 3½ lakhs of children are getting the benefit under this noble scheme. Nevertheless, it must be noted that at present in many schools hundreds of students are studying without midday meals. It must be the object of the Government to see that all school-going children get midday meals in the schools. At present the policy of the Government is to give fee concessions on the basis of communities and castes. I think the time has now come when we should change the present policy and take bold steps to give free education for all students up to the 11th standard and the Government should levy an education cess, if necessary, on parents whose income may be more than Rs. 2,500 per year.

The Government have taken note of the fact that the price of foodgrains is shooting up. It is gratifying therefore to note the announcement made in the Address that Government have decided to procure 2 lakhs tons of rice through wholesale dealers and co-operative organizations for distribution through fair price shops. The price of rice in some districts of the State is Re. 1–2–0 for pucca. This is beyond the purchasing capacity of the average people in the State. The price has to be maintained at 0–12–0 per pucca. Then only it will be possible for the ordinary people to purchase the foodgrain. It is also gratifying to note that our Government have decided to fix a ceiling on land holdings, on the existing as well as future holdings. It is really a noble proposal. We welcome it. While fixing the ceilin, the Government should take into consideration not only the extent of the land, but also the quality of the land, the income from the land and the market value of the land. Fixation of ceiling on existing holdings merely on the basis of the extent of the holding, I believe, will bring disastrous consequences in some cases. The question as to how we should use the excess land, which we take over, must also receive the serious consideration of the Government. It is generally said that the excess lands should be vested with the village panchayats and the lands should be managed through the Co-operative societies under the supervision of the village panchayats. That is a problem about which we should have clear notions. We should have definite preconcerted designs as to how we should manage the excess land which we will acquire after the ceiling is fixed.

It is suggested in the Address that there has been failure of crops in Tirunelveli, Ramanathapuram and North Arcot districts. I wish to take this opportunity to bring to the notice of the Government that in some villages in Kanyakumari district also there has been failure of crops. It is not due to the scarcity of water in the Pechipara dam but it is due to the carelessness and negligence of the authorities in the distribution of water. They have failed to

5th February 1959] [Sri T. T. Daniel]

remove silt from the channel in proper time and that has caused the failure of crops in the villages. I request the Government to take adequate measures to extend relief to these areas also.

The Government have also taken note of the grievances of the non-gazetted officers of the State. We are really happy to read from the Address that the Government have decided to set up a Commission to scrutinize the present structure of scales of pay, dearness allowance and retiring benefits of the Government servants in the State. It is a wholesome measure.

For non-gazetted officers, the Government have already decided to give Rs. 5 in addition to the existing dearness allowance with retrospective effect from the month of January this year. The disparity that exists betwen the non-gazetted officers of the State Government and the Central Government, has to be done away with and I believe that the Government will take very soon appropriate measures to bridge this gap, this difference, between them as early as possible. 11-10 a.m.

I would like to bring to the notice of the Government that after integration an increase of Rs. 12 in the dearness allowance has been sanctioned by the State Government, but with a feeling of sorrow. I must point out that this beneficial measure has not been extended unfortunately to the non-gazetted officers of the former Travancore-Cochin State personnel. I believe that the increase of Rs. 12 already sanctioned and Rs. 5 just sanctioned by the Government will be given to the non-gazetted officers of the former Travancore-Cochin State personnel also.

So far as the integration of the former Travancore-Cochin State personnel is concerned, I would like to say that although in some departments the integration has been over, in some other departments it has not yet been completed; as a result of which the legitimate promotions and the increase in the scales of pay of the non-gazetted officers of the former Travancore-Cochin State personnel are seriously handicapped. I wish that the Government, which have come forward with a very sympathetic heart to rectify the grievances of the non-gazetted officers, will also have in their mind the legitimate grievances of the former Travancore-Cochin State personnel.

I must also bring to the notice of the Government that recently there has been some unrest in Kanyakumari district caused on account of some restriction imposed in the matter of collection of firewood from the hills. Daily several thousands of poor labourers will be going to the various hills to collect firewood and with whatever little amount they will be getting by selling headloads of firewood, they will be purchasing tapioca and rice. They run a distance of about 15 miles for that purpose and most of them do not take even noon meals. We can see them including women and children in the morning going like streams to these hills and returning late in the evening. This is the tragic story about these people. Devoid of all other facilities for better avocation, they have taken up

[Sri T. T. Daniel] [5th February 1959

this work as profession and as a means of earning livelihood. This is a problem which is peculiar to that district and I am sure that our Government will approach this problem with a human attitude and sympathetic consideration and will permit these poor labourers to continue to collect the jungle firewood in the hills as they have been doing from time immemorial.

Sir, so far as Harijans are concerned, there are certain beneficial measures enacted by the Madras Government which have not been extended so far. Our Government are distributing lands to the extent of several lakhs of acres to the Harijans for housing and agricultural purposes. But such a noble measure has not so far been extended to Kanyakumari district. It is seen from the rules framed by the Madras Government that the Harijans could get the benefits of irrigation wells, only if they have got two acres of land. The value of the land in the Kanyakumari district varies from place to place and we cannot find even one Harijan there who would be having more than two acres of land. So, certain rules which benefit only if certain conditions are fulfilled by the Harijans, have been framed taking into consideration the peculiar conditions of land in our State. All those rules and conditions have to be relaxed so far as Kanyakumari is concerned so that Harijans may get teh benefit of tohse noble schemes in that district also In this connection, I must also ponit out that at present Harijan students are asked to pay the School Final Examination fee and college fee first and this fee is refunded afterwards. It is not possible for the Harijans in many cases to pay even the School Final Examination and college fees. I would therefore suggest to the Government that instead of refunding the fee already paid by Harijans, straightway an order must be issued stating that the Harijans need not pay the examination fee. Then only the students who are unable to pay these fees and therfeore forced to discontinue their studies will get the benefit under that order.

So far as the service conditions of the private secondary school teachers are concerned, I must tell that the rules relating to the Private Secondary School Teachers' Pension Scheme have not so far been extended to Kanyakumari district. So much so many teachers in the private secondary schools, who have retired after this scheme has come into effect, are unable to apply for the pension under Pension Rules. The disparity between the scales of pay of the secondary school teachers in Kanyakumari district and other districts should be done away with and the Government should take immediate measures to ameliorate the conditions of the private secondary school teachers.

*SRI P. S. CHINNADURAI: மதிப்பிற்குறிய துணைத் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரைதான் இந்த ராஜ்ய சர்க்காரின் கொள்கையை பொதுப்படையாக அறிவிப்பது என்பது உண்மையானால், கவர்னர் பெருமான் நேற்றைய தினம் இங்கே ஆற்றியுள்ள உரை உண்மையிலேயே மிகவும் ஏமாற்றம் அளிப்பதாக அமைந்திருக்கிறது என்று நான் வருத்தத்துடன் கூற விரும்புகிறேன். நம்முடைய ராஜ்ய சர்க்கார் சமதர்மக் கொள்கையை ஏற்றுக்

கொண்டிருக்கிறார்கள் என்று பன்முறையும் இந்த மன்றத்தில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு இம் மன்றத்திற்கு வெளியிலும் பறைசாற்றப்பட்டு வருவதை நான் காண்கிறேன். அப்படியிருக்க, அந்த சமதர்மக் கொள்கைகளை நடைமுறையில் கொண்டுவருவதற்குறிய வேலைத் திட்டங்களைக் குறித்து கவர்னர் பெருமான் அவர்கள் பொதுப் படையாகவேனும் தம் உரையில் எடுத்துரைப்பார்கள் என்று இந்த ராஜ்யத்தைச் சேர்ந்த நல்ல குடிமகன் ஒவ்வொருவனும் நிச்சயமாக எதிர்பார்ப்பான். அப்படி எதிர்பார்ப்பவர்களுக்கு கவர்னர் பெருமான் அவர்களுடைய இந்த உரை எல்லா வகையிலும் பெருத்த ஒரு ஏமாற்றத்தைத்தான் அளிப்பதாக இருக்கிறது என்று நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். "பருவநிலை சாதகமாக இருக்கும் காலங்களிலும் உணவுப் பற்றுக்குறை நீடித்து வருவது, வேளாண்மைப் பொருள்களின் விளையை நாம் இன்னும் பன்மடங்கு பெருக்கும் வகையிலே தொடர்ந்து முயல வேண்டும் என்னும் படிப்பினையைத் தான் வலியுறுத்துகிறது" என்று கவர்னர் பெருமான் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அதே நேரத்தில் அந்த வேளாண்மைப் பொருள்களின் விளைவை எப்படி பன்மடங்கு போக்குவது? அதற்காக அந்த ஆண்டில் நாம் என்ன திட்டமிட்டிருக்கிறோம் இதுவரையில் நாம் சாதித்த சாதனைகள் என்ன? அவைகளின் மதிப்பீடு என்ன? அதற்கு அந்த ஆண்டு புதிதாக என்ன என்ன வேலைத்திட்டங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த மதிப்பீட்டை இன்னும் அபிவிருத்தி செய்யப்போகிறோமா என்பன போன்ற வைகளைப் பற்றி இந்த உரையில் சரியான விளக்கம் இருக்கும் என்று அந்த ராஜ்யத்திதைச் சார்ந்த ஒவ்வொரு குடிமகனும் எதிர்பார்ப்பது இயல்பேயாகும். அப்படியிருக்க இந்த உரையில் அதற்குறிய விளக்கங்கள் காணப்படாததும், அதற்கு மேல் அதுபற்றி ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற அவனுக்கு ஒரு முற்றுப்புள்ளிவைக்கும் நிலையில், சந்தேகத்தை தூண்டிவிடக்கூடிய முறையில் இங்கு சில விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறன. உதாரணமாக, எப்படி வேளாண்மை விளைவுகளை அதிகமாக்குவது, அதிகமாக்குவதற்கு நாம் எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய வேலைத் திட்டங்கள் என்ன? அல்லது அதற்கு அனுஷ்டிக்கக்கூடிய அடிப்படைக் கொள்கைகள் என்ன? இந்த அடிப்படைக் கொள்கைளில் மிக முக்கியமானது நிலச் சீர்திருத்தம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. சமதர்மக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கும் அந்த அரசாங்கத்திற்கு நிலச் சீர்திருத்தம் என்பது ஒரு முக்கியமான அடிப்படைக் கொள்கையாக அமைந்திருக்க வேண்டும், நமது சர்க்கார் அந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கிறது என்பது உண்மையானால் நிலச் சீர்திருத்த விஷயத்தில் நாம் ஏன் அவ்வளவு அக்கரையின்மையைக் காட்டி வருகிறோம் என்பதற்கு சரியானதொரு பதில் கூறியாக வேண்டும். 1947-ம் ஆண்டு சுதந்திரம் அடைந்த நாள் முதற்கொண்டு நம் நாட்டில் சமதர்மம்தான் அமைக்கப்படவேண்டுமென்று பலவாறாகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. சென்ற 12 ஆண்டு காலத்தில் அதற்குறிய முயற்சிகளில் நாம் எந்தளவு ஈடுபட்டிருக்கிறோம், எந்த அளவு நாம் நிலச் சீர்திருத்தத்தை கொண்டு வந்திருக்கிறோம், என்று நாம் கொஞ்சம் கணக்குப் போட்டு பார்க்கவேண்டும். அப்படி பார்க்கும்போது நிலவுடமைக்கு உச்சவரம்பு கட்டுவதற்கான ஒரு சட்டத்தை நாம் சென்ற 12 ஆண்டு காலத்தில் இங்கு கொண்டு வந்து நிறைவேற்றவில்லை என்பது வருத்தப்பட வேண்டிய ஒரு விஷயமாகும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சென்ற ஆண்டில் கூட கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையில் அவர்கள் சொன்னார்கள், இனிமேல் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் அதிகப்படியான நிலம் வாங்குவதற்கு வகையில்லாத ஒரு நிலைமையை உண்டாக்க சட்டம் கொண்டு வருவதாக சொன்னார்கள். அது சம்பந்தமாக சென்ற ஆண்டு என்ன செய்யப்பட்டது. ஒன்றுமே செய்யப்படவில்லை. ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் நிலம் வாங்குவதற்கு இனிமேல் இந்த ராஜ்யத்தில் இடமிருக்காது என்றதொரு நம்பிக்கை மக்களிடையே உண்டாக்கப்பட்டதே தவிர அந்த நம்பிக்கை பூர்ணம் அடைய எதுவுமே செய்யப்படவில்லை. அப்படி ஏதும் செய்யப்படாத நிலையில்

[Sri P. S. Chinnadurai] [5th February 1959

மீண்டும் நாம் இங்கே கூடியிருக்கிறோம். அப்படி கூடி நாம் என்ன பார்க்கிறோம் என்றால் நிலவுடைமைக்கு வரம்பு கட்டும் வகையில் மிக விரைவில் ஒரு சட்டம் கொண்டு வரவேண்டுமென்பது சர்க்காரின் எண்ணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சென்ற ஆண்டில், சட்டமே கொண்டு வரப்போகிறோம் என்று சொல்லப்படுவதைத்தான் இப்பொழுது அப்படி ஒரு சட்டம் கொண்டு வர எண்ணம் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இந்த எண்ணத்தைக் கூட வேறு வகையில் இன்னொன்றோடுகூட சேர்த்துக் பார்க்க வேண்டுமென்று நம்மிடம் இப்பொழுது கூறப்படுகிறது. நம் நாட்டில் இப்பொழுது காணப்படும் உணவுப் பற்றாக்குறையை சரிவர சமாளிக்க வேண்டுமானால் அவைகளையெல்லாம் கருத்தில் கொண்டு நிலச் சீர்திருத்தத்தைப்பற்றி யோசிக்க வேண்டுமென்று புதியதாக ஒரு முழக்கத்தை நம்மிடையேநாம் இன்று கேட்கிறோம். எவைகளையெல்லாம் கருத்தில் கொள்ள வேண்டுமென்று சொல்லப்படுகிறது என்பதைப் பார்ப்போம். நிலவுடைமைக்கு உச்சவரம்பு கட்டினால் அல்லது நிலச் சீர்திருத்தம் கொண்டு வந்தால் நாட்டில் உள்ள உணவுப் பண்டங்களின் உற்பத்தி வெகுவாக பாதிக்கப்படுமென்று சொல்கிறார்கள். அப்படி ஒரு அச்சத்தை யார் புகுத்துகிறார்கள் என்பதையும், யார் அப்படிப்பட்டதொரு அச்சத்தை புகுத்த முற்படுகிறார்கள் என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். இந்த அச்சம் ஏன் இப்பொழுது புதிதாக புகுத்தப்படுகிறது என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். நிலப்பிரபுக்களின் பல்வேறு சூழ்ச்சிகளின் இதுவும் ஒன்று, என்ற அச்சமும் ஐயமும்தான் எனக்கு ஏற்படுகிறது. நிலவுடமைக்கு உச்சவரம்பு கட்டினால் உற்பத்தி பாதிக்கப்பட்டுவிடும். நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுத்தால் உற்பத்தி பாதிக்கப்பட்டுவிடும், ஆகவே உணவுப் பொருள்களின் விளைவு குறைந்துபோய் உணவுப் பஞ்சம் நாட்டில் ஏற்பட்டுவிடும், ஆகவே கொஞ்சம் ஆரஅமர ஆலோசித்து, தாமதித்து இந்த விஷயங்களை கருத்தில் கொண்டு அதற்குறிய சட்டம் கொண்டு வருவதா, வேண்டாமா என்பதைப் பற்றி கவனிக்கவேண்டுமென்பது இப்பொழுது நம்மிடம் கூறப்படுகிறது. திருநெல்வேலி தொகுதி அங்கத்தினர் கூட இந்த ஐயப்பாட்டைத்தான் வெளிப்படுத்திப் பேசினார்கள். அவைகளையெல்லாம் கருத்தில் கொண்டு நிலச்சீர்திருத்தத்தை எந்தளவில் கொண்டு வரலாம், எந்தளவில் கொண்டு வந்தால் நாட்டிற்கு நல்லது, எந்தளவில் கொண்டு வந்தால் உணவு நிலைமை பாதிக்கப்படாமல் இருக்கும் என்பனபற்றியெல்லாம் நன்கு சிந்தித்துப் பார்த்து நடவடிக்கைகள் எடுக்க வேண்டும், அவசரப்பட்டு ஒன்றும் செய்துவிடக் கூடாது என்று இப்பொழுது சொல்லப்படுகிறது. இவையெல்லாம், உண்மையிலேயே இந்த ராஜ்யத்தில் இருக்கிற குடிமக்கள் இயல்பாக இந்த ராஜ்ய அரசாங்கத்தினிடமிருந்து எதிர்பார்ப்பதல்ல. அதற்குப் பதிலாக இந்த ராஜ்ய அரசாங்கத்தில் இருந்து மிக விரைவாக நிலச் சீர்திருத்தச் சட்டம் வருவதைத்தான் எதிர்ப்பார்க்கிறார்கள். மிகத் தீவிரமான சட்டத்தைத் தான் எதிர்பார்க்கிறார்கள். அதற்குறிய செயல்முறைத் திட்டங்களைக் கொண்டுவரவேண்டுமென்றுதான் உண்மையாகவே மக்கள் எதிர் பார்க்கிறார்கள். இஸ்ரெயில் நாடு என்பது ஒரு சிறிய நாடாகும். அந்நாடு தோன்றிய நாள் முதற்கொண்டு, எவ்வளவு குறுகிய காலத்தில் நிலச் சீர்திருத்தத்தை அந்நாட்டில் கொண்டுவந்து அந்நாட்டின் நிலப் பிரச்னையை சமாளித்திருக்கிறார்கள் என்பதைப் பார்த்து அதை ஒரு படிப்பினையாக நாம் கொள்ளவேண்டுமென்று தெரிவித்துக்கொள்ள, விரும்புகிறேன். வினோபாஜி அவர்கள், ஊரில் உள்ள நிலங்கள் எல்லாம் உலகநாதனின் நிலமென்று சொல்லி வருகிறார்கள். ஊரில் உள்ள விளை நிலங்களை மக்களின் பொதுவுடைமையாக்கியிருக்கிறார்கள், இஸ்ரேல் நாட்டில் அங்கு ஒரு வினோபாஜியும் இல்லை, ஒரு காந்திஜியும் அங்கு தோன்றவில்லை. ஆனால் இதை அந்த நாட்டில் சாதித்திருக்கிறார்கள். காந்திஜி பிறந்த நாட்டில் பிறந்திருக்கும் நாம், அவர் காட்டிய வழியை கடைப்பிடிக்க வேண்டும், கடைப்பிடிக்கிறோம் என்று சொல்லும் நாம், விளை நிலங்களை பொதுவுடைமையாக்கவேண்டுமென்று வினோபா அவர்கள் சொல்லும் நேரத்தில், நிலச் சீர்திருத்தத்தை கொண்டுவர தயக்கம் காட்டி, உணவுப் பொருள்களின் விலைவாசியை சுட்டிக் காட்டி நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்தால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும், உணவுப்

5th February 1959] [Sri P. S. Chinnadurai]

பொருள்களின் விலை உயர்ந்து விடும் என்று சொல்லி இப் பிரச்னையை தாமதப்படுத்திக்கொண்டுபோய், இப்பிரச்னையை கைவிட முயல்கிறோம் என்ற எண்ணம்தான், கவர்னர் பெருமானது உரையை படிக்கும் எவருக்கும் எழுகிறது. ஆகவே, கூடிய சீக்கிரத்தில் நிலச்சீர்திருத்தத் திட்டத்தை செயல்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்த படியாக, உணவுப்பொருள் என்று பேசும்போது அதன் விலைவாசி, குறித்தும் இங்கு ஐயம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. உணவுப் பொருள்களின் விலைகள் இன்னும் ஏற்றமாகவே இருந்துகொண்டு வருகிறது. நல்ல அறுவடைக்கான அறிகுறிகள் இருந்தபோதிலும்கூட உணவுப் பொருள் களின் விலை ஏற்றமாகவே இருந்து வருகிறது என்று குறிப்பிட்டிருக் கிறார்கள். நான் கேட்கிறேன், இன்றுதான் இது தெரிந்திருக்கிறதா என்று ? இது சென்ற ஆண்டிலேயே ஏற்றுக்கொள்ளப்பட்ட விஷய மாயிற்றே ? சென்ற ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை சமர்ப்பித்து உறையாற்றியபோது நிதியமைச்சர் அவர்கள் உணவுப் பண்டங்களின் விலை 56-ம் ஆண்டைவிட 35 சத விகிதம் அதிகமாயிருக்கிறது என்று குறிப் பிட்டார்கள். சென்ற ஆண்டைக் காட்டிலும் இந்த 12 மாத காலத்திற்குள் இன்னும் அதிகமாக விலை ஏற்றம் கண்டிருக்கிறது. இப்படி நாளுக்கு நாள் விலை ஏறிக்கொண்டே போகிறது. இதற்கு என்ன வழிவகைகள் செய்யப் போகிறோம் ? உணவு தான்ய விசாரணைக் கமிட்டி ஒன்றை அரசாங்கம் நியமித்தது. அசோக்மேத்தா அவர்களின் தலைமையில் அது அமைந்தது. அவர்கள் சில ஆலோசனைகள் சொன்னார்கள். அரசாங்கமே இந்த உணவு தான்யங்களை வாங்கி வைக்கவேண்டும். உணவு தான்ய வாணிபம் முழுவதையும் அரசாங்கமே ஏற்று நடத்தவேண்டுமென்று அக்கமிட்டி சொல்லிற்று. அன்று அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை பின்னர் இப்பொழுது அதை கொள்கையாக ஏற்றுக் கொண்டிருக் கிறார்கள். அதை முற்றிலும் அமுல் நடத்தப் போகிறார்களா என்று பார்த்தால், அவ்வாணிபம் முழுவதையும் ஏற்று நடத்தவேண்டுமென்று ஆலோசனை கூறப்பட்டிருக்கிறதே தவிர அதை முற்றிலும் செயல்படுத்த முடியவில்லை என்பதை இந்த உரை தெளிவுபடுத்துகிறது. வெறும் ஆலோசனையாக இருப்பதால் அதுதான் நல்லது, அதை முற்றிலும் செயல்படுத்தமுடியாது, அப்படி உணவு தான்ய வாணிபம் முழுவதையும் சர்க்கார் ஏற்று நடத்துவதில் பலவிதமான சிக்கல்கள் ஏற்படலாம், ஆகவே இதை ஆலோசனை என்ற அளவில் வைத்து வியாபாரிகள் மூலமாகவும் கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவும் உணவு தான்யத்தை நாம் ஓரளவு வாங்குவது என்ற கொள்கைதான் சிறப்புடையது என்று திருநெல்வேலி அங்கத்தினரும் குறிப்பிட்டார்கள், இது எதைக் காட்டுகிறது ? சர்க்கார் உணவு தான்ய வாணிபத்தை முழுமையும் ஏற்கக்கூடாதென்பதைத்தான். இது சரியல்ல. உணவு தான்ய வாணிபத்தை மக்களின் நன்மைக்காக சர்க்கார் ஏற்று நடத்துவது கடமை.

இதை காலாகாலத்தில் செய்து தீர்க்க வேண்டும் என்று ஆசைப் படுவதினால் தான் இதைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். அரசாங்கம் இதில் முழு பொறுப்பேற்று இதை நடத்துவதானால் இப்போது இருக்கின்ற விலையேற்றத்தை தடுக்கமுடியும். நாட்டில் இருக்கின்ற உணவுத் தேவையை மனதில் வைத்துக்கொண்டு இதில் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற் கான அடிப்படையில் நாட்டில் பல்வேறு பாசனத்திட்டங்கள் நிறைவேற்றப் படுகின்றன. அதில் பரம்பிக்குளம் திட்டத்தைப்பற்றி பொதுவாக நாட்டி லிருக்கின்ற அத்தனை மக்களும் குறிப்பாக கோவை ஜில்லாவில் இருக்கின்ற மக்கள் மிக ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இப்போது தரப்பட்டிருக்கும் கவர்னர் பெருமான் உரையில் பரம்பிக்குளம் திட்டத்தின் வேலை ஆரம்பிக்கப்படும் என்று மட்டும் இருக்கிறதே தவிர அதன் மூலம் கோவை ஜில்லாவிலுள்ள மக்களுக்கு எந்த அளவில் பலன் கிடைக்கும் என்கின்ற புள்ளிவிவரங்கள் கொடுக்கப்படவில்லை. இதன் மூலம் இரண்டு லட்சத்தி ஐம்பதாயிரம் ஏக்கர்கள் பயன் பெறும் என்று கவர்னர் பெருமான் உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. சமீபத்தில் இரண்டு லட்சம்

[Sri P. S. Chinnadurai] [5th February 1959

ஏக்கர்கள் பயன் பெறும் என்று தெரிவித்தார்கள். அதற்கு முன்னால் மூன்று லட்சம் ஏக்கர்கள் பயன் பெறும் என்று சொல்லப்பட்டது. இவ்விதம் அடிக்கடி மாறி மாறி விபரங்கள் சொல்லப்படுகிறது. இவ்விதம் அடிக்கடி பாசன வசதி பெறுகின்ற இடத்தின் அளவானது மாறிக் கொண்டிருப்பதை நாம் காண முடிகிறது. மேலும் இப்போது கோவை ஜில்லாவை எடுத்துக்கொண்டால் இப்போது பஞ்சத்தின் மூலம் மிகவும் பாதிக்கப்படுகின்ற தாலூக்காக்கள் பல்லடம், உடுமலைப்பேட்டை, தாராபுரம் இவைகளாகும். இந்த தாலூகாக்களிலுள்ள மக்கள் இப்போது வருகின்ற பரம்பிக்குளம் திட்டத்தின்மூலம் அதிக பாசன வசதி பெறலாம் என்ற நம்பிக்கையோடு இருந்து வருகிறார்கள். குறிப்பாக இப்போது போடப்பட்டிருக்கும் திட்டத்தைப் பார்த்தால் புஞ்சை பூமிகளுக்கு இதன் மூலம் பாசன வசதி கிடைக்குமா என்பது சந்தேகத்தில் இருக்கிறது. இதன் காரணமாக பல்லடம் தாலூகாவிலுள்ள மக்கள் ஐயப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த தாலூகாவில் 2 லட்சத்தி 50 ஆயிரம் ஏக்கர் பூமி இருக்கின்றன. இந்த பூமி எல்லாம் வானம் பார்த்த பூமியாக இருந்துகொண்டிருக்கின்றன. ஆகவே இந்த திட்டத்தின் மூலமாக இந்த பூமிகள் எல்லாம் பாசன வசதி பெறுமா என்று திட்டவட்டமாக தெரியவில்லை. இந்த பூமிகளுக்கு வேறு விதமான கால்வாய் பாசன வசதியும் கிடையாது. வேறு எந்தவிதமான பாசன வசதியும் கிடையாது. வெறும் வானம் பார்த்த பூமிகளாக இருந்துகொண்டிருக்கின்றன. ஆகவே இந்த திட்டத்தின் மூலமாக பல்லடம் தாலூகா, மக்களுக்கு என்ன வசதி செய்துகொடுக்கப் போகின்றார்கள் என்பது தெளிவாகத் தெரியவில்லை. அங்குள்ள மக்கள் பெரும் ஏக்கத்தோடு இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆயாசப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதே சமயத்தில் இந்த திட்டத்தின் மூலமாக கிடைக்கின்ற பாசன வசதியை நஞ்சை பூமிகளுக்கு மட்டும்தான் பயன்படுத்தவேண்டுமென்று பல முயற்சிகள் நடந்துகொண்டிருக்கின்றன. இதற்காக பல மகாநாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன. இதற்காக பெருத்த ஆதரவும் சேகரிக்கப்பட்டு வருகிறது. பெரிய அரசியல் வாதிகள் பலரும் இதில் ஈடுபட்டிருப்பதாக தெரியவருகிறது. இந்த நிலைமையில் அந்த தாலூகா மக்கள் இவைகளை எல்லாம் பார்த்து மிகவும் ஆயாசப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த அரசாங்கம் என்ன ஆறுதல் கூறப்போகின்றது என்பதை நான் அறிய விரும்புகிறேன். பரம்பிக்குளம் திட்டத்தின் மூலமாக கிடைக்கும் தண்ணீர்மூலம் பரவலாக புஞ்சை நிலங்களுக்கு பாசன வசதி கிடைக்கும் என்று இந்த அரசாங்கம் தெளிவாக அறிவிக்கப்போகின்றதா என்பதை அறிய விரும்புகிறேன். கவர்னர் பெருமான் உரையில் இதைப்பற்றி குறிப்பிடவில்லை. புஞ்சை, வேளாண்மைக்கு மட்டுமே பரம்பிக்குளம் திட்டத்தின் மூலமாகப் பாசன வசதி கிடைக்கு என்று குறிப்பிடப்பட்டிருக்குமானால் உண்மையிலேயே. இந்த நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை நான் ஆதரித்திருப்பேன் அதுவொன்று குறிப்பிடாமல் இரண்டொரு வார்த்தைகளில் "ரூபாய் 30 கோடி செலவாகும் இத்திட்ட நிறைவேற்றத்திற்கான ஆரம்ப வேலைகள் ஏற்கெனவே தொடங்கப்பட்டு விட்டன" என்று மாத்திரம் குறிப்பிடப் பட்டிருக்கிறது. தொடங்கினால் என்ன? இதைப்பற்றி எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மக்களுக்கு என்ன கிடைக்கும் என்பதுதான் பிரச்னை. ஆக்கப் பொறுத்தது, ஆற பொறுத்திருக்க வேண்டாமா என்று சொல்லக் கூடும். இப்போது ஆக்கப் பொறுத்து ஆறவும் பொறுத்திருந்தாய்விட்டது. ஆனால் இப்போது யாருக்கு பரிமாறப்படுகிறது என்பதைத்தான் பார்க்க வேண்டியிருக்கிறது. ஆகவே இத் திட்டத்தின் மூலம் பாசன வசதி கிடைக்கும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் இந்த மூன்று தாலூகா மக்களுக்கு பாசன வசதி கிடைக்கும்படியான முறையில் இத் திட்டத்தைக் கொண்டுவரவேண்டும் என்பதை வலியுறுத்திக் கூற ஆசைப்படுகிறேன். இத் திட்டத்தின் மூலமாக புஞ்சை வேளாண்மைக்கு மட்டுமே பாசன வசதி கிடைக்கும் என்று சொல்லக்கூடிய தெளிவான ஒரு கொள்கையை அரசாங்கம் அறிவிக்க வேண்டும். மேலும் நமது நாட்டில் இப்போது அவசியத்திற்கு ஏற்றபடி பருத்தி விளைச்சல் இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். வெளி நாட்டிலிருந்துதான் பருத்தி இறக்குமதி

5th February 1959] [Sri P. S. Chinnadurai]

செய்யக்கூடிய நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. இப்போது அதிகமாக பருத்தி விளைகின்ற தாலுகாக்கள் பல்லடம் உடுமலைப்பேட்டை போன்ற தாலூக்காக்களில்தான். இந்த தாலூகாக்களில் இப்போது மழையை எதிர்பார்த்துத்தான் பருத்தி பயிர் செய்யப்படுகின்றது. இந்த நிலைமையில் போதுமான அளவுக்குத் தண்ணீரை உபயோகப்படுத்தி பருத்தி பயிர் செய்வதாக இருந்தால் இன்னும் கூடுதல் அளவுக்கு பருத்தியை உற்பத்தி செய்ய முடியும். இப்போது கிடைக்கின்ற அளவைக்காட்டிலும் இரண்டு மடங்கு உற்பத்தி செய்ய முடியும். இப்போது ஈரங்காட்டில் கிடைக்கின்ற பருத்தி இரண்டு பொதி என்றால் தண்ணீர் பாய்ச்சினால் நிச்சயமாக நான்கு பொதி அல்லது ஆறு பொதி பருத்தியை உற்பத்தி செய்ய முடியும். ஆகவே இந்த தாலூகாக்களுக்கு இந்த திட்டத்தின் மூலமாக பாசன வசதி கிடைக்கும் என்று அரசாங்கம் தெளிவாக அறிவிக்க வேண்டும். இதற்கு அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. பொதுவாக பயிர் என்றால் நாம் எல்லோரும் நெல்லை மாத்திரம்தான் எண்ணிக்கொண்டிருக்கிறோம். புஞ்சை பயிர்களைப்பற்றி நாம் அவ்வளவாக அக்கரை கொள்வதில்லை. ஆகவே புஞ்சை பூமிகளுக்கு இத் திட்டத்தின் மூலம் பாசன வசதி கிடைக்க செய்யவேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும், பொறுப்பாகும் என்பதை குறிப்பிட விரும்புகிறேன். சென்ற தடவை இதே சபையில் இதைப்பற்றி நான் குறிப்பிட்டபோது, "இப்போது என்ன அவசியம், திட்டம் இன்னும் உருவாகவில்லை" என்று சொல்லப்பட்டது. இப்போது திட்டம் உருவாக்கப்பட்டுவிட்டது.

THE HON SRI C. SUBRAMANIAM : உருவாகவில்லை, கருவாகியிருக்கிறது.

* SRI P. S. CHINNADURAI : கருவாகி உருவுமாகிவிட்டது. என்னைப் பொறுத்தவரையில் ஏன் இதை இப்போது வற்புறுத்துகிறேன் என்றால் இதைப்பற்றி தீர்மானிக்கிற இன்ஜினியர்கள் புஞ்சை பூமிகளுக்கும் பாசன வசதி செய்துகொடுக்க வேண்டும் என்ற நினைப்போடு திட்டமிட்டு வேலை ஆரம்பிக்கப்பட வேண்டும். இல்லையென்றால் செல்வாக்குள்ள பலர் இன்ஜினியர்களிடத்தில் சொல்லி, அவர்கள் அதுதான் சர்க்கார் கொள்கை எனக் கருதி வேறு வகையில் திட்டம் ஆரம்பிக்கப்படுமானால் கடைசியில் இதை எதிர்பார்த்து நிற்கின்ற மக்கள் கஷ்டமடைய வேண்டிய நிலைமை ஏற்படும்.

THE HON SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், இந்தப் பிரச்னையைப் பற்றி மேலும் மேலும் பேசிக்கொண்டிருப்பதால் இதைப்பற்றி உடனடியாக தீர்மானம் செய்துவிட முடியாது. கனம் அங்கத்தினர் அவர்கள் கூறின விபரங்களை எல்லாம் கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன். இனிமேல் வேறு பிரச்னையைப்பற்றி பேசலாம்.

* SRI P. S. CHINNADURAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் இதை பற்றி தக்க நடவடிக்கை எடுப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் நான் வேறு பிரச்னைகளைப் பற்றி பேசுகிறேன். விளைபொருள்களை அதிகமாக்க வேண்டும் என்று பல இடங்களிலும் சொல்லப்படுகிறது. ஆனால் அதற்கான ரசாயன எருக்கள் விவசாயிகளுக்கு கிடைக்கிறதா என்பதைப் பார்த்தால் பெரும்பாலோருக்கு கிடைப்பதில்லை என்று தான் சொல்ல வேண்டும். இப்போது கிடைப்பதை விட இரு மடங்காக பெருக்குவதற்கு முயற்சி செய்யுங்கள், அதற்கு வேண்டிய ரசாயன எருக்களை உபயோகியுங்கள் என்றெல்லாம் பிரசாரம் செய்யப்படுகிறது. ஆனால் இப்போது நடை முறையில் இருப்பதைப் பார்த்தால் ரசாயன எரு வாங்குவது என்பது ஒரு பெரிய சாதனையாக இருந்து கொண்டிருக்கிறது. கூட்டுறவு ஸ்தாபனத்தின் மூலமாக கொடுக்கப்பட்டு வருகிறது இந்த ரசாயன எருக்கள் எல்லாம். ஆனால் அந்த இடத்தில் போய் இந்த எருக்களை வாங்கி வருவது என்பது பெரிய காரியமாக இருந்து கொண்டிருக்கிறது. இதற்கு பல தொல்லைகளை சமாளிக்க வேண்டியிருக்கிறது. அதிலே பிளாக் மார்க்கெட் வேறு. அதற்கு ஒரு அளவே கிடையாது. அத்தகைய மோசமான நிலைமை ஏற்பட என்ன காரணம்? போதிய அளவு எரு கிடைப்பதில்லை.

[Sri P. S. Chinnadurai] [5th February 1959

சிந்திரியிலிருந்து எவ்வளவு வரவேண்டுமோ அந்த அளவு குறைவாக இருக்கிறது. அதைப் பூர்த்திசெய்ய என்ன செய்யப்போகிறேம் ? அதைப் பூர்த்தி செய்ய சென்ற ஆண்டிலே எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன ? இந்த ஆண்டிலே எடுத்துக் கொள்ளப் போகிற நடவடிக்கைகள் என்ன ? அதனைக் குறித்து கவர்னர் பெருமான் உரையிலே எதனையும் காணமுடியவில்லை.

நெய்வேலியில் உர உற்பத்திக்கு வழி செய்யப் போகிறேம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. உர உற்பத்திக்கு எப்படி வழி செய்யப் போகி றேம் ? அதை நாமே செய்யப் போகிறேமா ? அல்லது தனியார் துரைக்கு விடப் போகிறேமா ? அதைப் பற்றி ஒன்றையும் காணேம் கவர்னர் பெருமான் உரையிலே. உர உற்பத்தியை தனியார் துரைக்கு விட்டு விடக் கூடாது. அந்த ஏற்பாடுகளை, உர உற்பத்தித் தொழிற்சாலை ஏற்படுத்துவதை அரசாங்கமே நடத்தவேண்டுமென்று நான் முழு மன தோடு வேண்டிக்கொள்கிறேன்.

மேலும், ஒரு பக்கத்திலே பார்த்தால் நிலப் பிரச்சினை சம்பந்தமாக ஒரு தெளிவான கொள்கையைக் காணேம். இன்னொரு பக்கத்தில் பார்த் தால் தொழில்கள் சம்பந்தமாக சிறப்பாக எதுவும் குறிப்பிடப்படவில்லை. தொழில்களை தேசீய மயமாக்கவேண்டுமென்ற பிரச்சினையில் அசாதாரண மௌனம் அனுஷ்டிக்கப்படுகிறது. தொழில்களை தேசீய மயமாக்குவது பற்றி இந்த உரையிலே ஒன்றும் காணப்படவில்லை. இந்தப் பிரச்சினை யில் சென்ற ஆண்டிலே என்ன செய்தோம் ? இந்த ஆண்டிலே என்ன செய்ய முயற்சிக்கப் போகிறேம் ? தனியார் துரைக்கு விடாமல் அரசாங் கத்துரையிலேயே புதிய தொழில்களை ஆரம்பிக்கவும், ஏற்கெனவே இருக்கும் தொழில்களை அரசாங்கம் எடுத்து நடத்தவும் இந்த ஆண்டிலே என்ன திட்டங்களை வைத்திருக்கிறேம் ? என்ன திட்டங்களை எடுத்து நிறை வேற்றப் போகிறேம் ? அதனைக் குறித்து இந்த உரையில் என்ன தெரி கிறது ? சமதர்ம சமுதாயத்தை அமைக்கவேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிற அரசாங்கத்திடமிருந்து இது பற்றிய அறிவிப்புகளை எதிர் பார்ப்பது இயற்கை. " நீங்கள் ஒன்றும் எதிர்பார்க்க வேண்டாம், நாங்கள் போகும் போக்கில் தான் போவோம், நாங்கள் செய்வது தான் சமதர்மம், சமதர்மம் என்பதற்கு நீங்கள் எந்த உருவம் கொடுத்தாலும், நீங்கள் என்ன நினைத்தாலும், பரவாயில்லை " என்று ஒரு புது சமதர்மத்தைத் தோற்றுவிக்கும் முயற்சியைத் தான் காண்கிறேன். இந்தச் சமதர்மத்தை இந்த நாட்டு மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பொதுவாக அரசாங்கத்திற்கு ரொம்பப் படுமோசமான, வருத்தத் தக்க அச்சம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன். ஒரு பக்கத்திலே நில முதலாளிகளைக் குறித்து அச்சம் ; இன்னொரு பக்கத்திலே தொழில் முதலாளிகளைக் குறித்து அச்சம். தொழில்களை அரசாங்கம் ஏற்றுக் கொண் டால் உற்பத்தி பாதிக்கும், நிலத்தைப் பிரித்துக் கொடுத்தால் உற்பத்தி பாதிக்கும் என்ற அச்சம் அரசாங்கத்தை நடத்துகிறவர்களிடம் குடி கொண் கொண்டு விட்டது. அதன் விளைவாகத் தொழில்களை தேசீய மயமாக்கு வதில் தெளிவான கொள்கை எதுவும் காண முடியவில்லை. அரசாங் கத்தை ஏற்று நடத்துகிறவர்கள் மட்டு மல்ல, தொழில் கொர்ட்டுகளில் நீதி பதிகளாக உள்ளவர்களிடத்திலே, தொழில் விவகாரங்களைக் குறித்து விசா ரணை நடத்தும் பெருவாரி நியாயாதிபதிகளிடத்திலே இந்த மாதிரி ஒரு அச்சம் குடி கொண்டிருக்கிறது என்பதைக் காணவும் வருந்துகிறேன். தொழில் கோர்ட் விவகாரங்கள், சிவில் கோர்ட் விவகாரங்களைப் போல நீண்டு கொண்டே போய்க் கொண்டிருக்கின்றது. ஒரு தொழில் மன்றத்தில் 1954-ல் கொண்டுசெல்லப்பட்ட பிரச்சினை 1959-ல் இன்றும் நீதி மன்றத்தில் இருந்து கொண்டிருக்கிறது. இப்படி விவகாரங்கள் நீண்டு கொண்டு போகும் மோசமான நிலை ஏற்பட்டிருக்கிறது. அதனைக் குறித்து நாம் என்ன கொள்கையை அனுஷ்டிக்கப் போகிறேம். அதனைப் பற்றிய தீர்மானம் ஒன்றும் எடுத்துச் சொல்லப்படவில்லை. தொழில் கோர்ட்டு களில் எப்படிப் பட்ட நீதிபதிகள் நியமனம் ஆகின்றர்கள் ? முதலாளித் துவத்தில் ஊறிப் போனவர்கள் தொழிலாளர்கள் விவகாரங்களைத் தீர்ப்பதற் காக தொழில் கோர்டு நீதிபதிகளாக நியமிக்கப்படுகிறர்கள். தொழில்

5th February 1959] [Sri P. S. Chinnadurai]

என்றால் என்ன என்று நியமனமான பிறகு அவர்கள் புரிந்து கொள்ள வேண்டிய நிலை இருக்கிறது. அப்படி அவர்கள் புரிந்து கொள்வதற்கு முன்பே தொழில் கோர்ட்டிலிருந்து மாற்றப்படுகிறார்கள், அல்லது அதிலிருந்து நீக்கப்படுகிறார்கள். அதனால் தொழிலாளர்கள் உண்மையான பலனை எதிர்பார்க்க முடியாதிருக்கிறது. அதனால் கருணையற்ற தீர்ப்புகள் ஏராளமாக வருகின்றன. மனித இருதயத்தோடு கொடுக்கும் தீர்ப்புகள் அரிதாகி வருகின்றன. அப்படிப் பட்ட ஒரு நிலைமையை தொழிலாளர்கள் தாங்கமாட்டார்கள். கருணையற்ற தீர்ப்பினை தொழிலாளர்கள் சகித்துக் கொள்ள முடியாது. அரசாங்கம் இதிலே சற்று கவனம் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். சமூகத்திலே சரியானபடி அனுபவம் பெற்ற வர்களையே சமதர்மக் கருத்துக்களை ஏற்று, பண்பட்டுள்ள மனித இருதயத்தோடு, கருணையோடு தீர்ப்புக் கொடுக்கும் பழக்கமுள்ளவர்களையே—தொழில் கோர்ட் நீதிபதிகளாக நியமிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இத்தோடு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri M. A. MUTHIAH CHETTIAR** : துணைத் தலைவர் அவர்களே, இன்று நமது கவர்னர் உரையைப் பற்றிப் பேசும்போது பொதுவாக நமது அரசியலை நடத்தி வரும் மந்திரி சபையார் பல முயற்சிகளைச் செய்து வருவதைப் பாராட்டக் கடமை பட்டிருக்கிறோம். இப்படிப் பட்ட சந்தர்ப்பத்தில்—முக்கியமாக பட்ஜெட் இன்னும் ஒரு மாதத்தில் வர விருக்கின்ற நேரத்தில்—கவர்னர் உரையின் மீது பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கப் பெற்றது அதிர்ஷ்ட வசமாகும். ஏனென்றால், இப்போது அங்கத்தினர்கள் சொல்லும் அபிப்பிராயங்களை மந்திரிகள் கவனிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது.

(Sri R. Subramaniam in the Chair)

இந்தச் சந்தர்ப்பத்தில் அரசாங்கம் செய்தது போதாது என்று சொன்னால், டில்லியில் சண்டை போட்டு ஏதாவது பணம் கொண்டு வந்தால் தான் இன்னும் ஏதாவது செய்ய முடியும். அவர்களைக் குற்றம் சொல்லுவதாக எண்ணக் கூடாது. இப்போது தென்னிந்தியாவில் செய்யவேண்டியதையெல்லாம் செய்தாகி விட்டது என்று சொல்லுகிறார்கள். அது சரியல்ல என்று நான் சொல்லுவேன். பொதுவாக வட இந்திய ஆதிக்கம் என்று பேசும்போது "வட இந்தியா, தென் இந்தியா என்று பேசக் கூடாது" என்று சொல்லுகிறார்கள். அது வாஸ்தவம் தான், அது வேறு விஷயம். பொதுவாகச் சொல்லும்போது, ரீஜனல் கமிட்டி, ஸோனல் கமிட்டி என்று பெங்களூரில், திருவனந்தபுரத்தில், சென்னையில் எல்லாம் போடுகிறார்கள். இதை அவர்களே உணருகிறார்கள். அவர்களே தொழில்களை நாஷனலைஸ் செய்யவேண்டுமென்று சொல்கிறார்கள். கடைசியில் கிராமம் வரை கவனிக்கவேண்டிய நிலைமைக்கு வந்து விடுகிறார்கள். ஆகையால் டில்லிக்குப் போய் அதிகப் பணம் வேண்டுமென்று சொல்லுவதில் தவறு ஒன்றும் இல்லை. சென்னைக்கு ஒதுக்கப்பட்ட பணத்தில், 5 வருஷங்களின் செலவிற்கு 150 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டதில், 90 கோடி ரூபாய்கள் செலவு செய்து விட்டு 150 கோடி ரூபாய் போதாது என்று சொல்லி இருக்கிறார்கள். 150 கோடி ரூபாயில் 90 கோடி ரூபாயைச் செலவு செய்ததற்கு மந்திரிகள் எல்லோரையும், உத்தியோகஸ்தர்களெல்லோரையும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம். சில சந்தர்ப்பங்களில் சரியான திட்டங்கள் போடாது பணம் செலவழிக்கப்படாமல் தங்கிப் போய்விடுவதுண்டு. ஆனால் வட இந்தியாவில், பள்ளிகளில், கல்லூரிகளில், பல்கலைக் கழகங்களில் 60 லட்சம் டெபிஸிட் என்று போடுகிறார்கள். 20 வருஷங்களில் 30 லட்சம் நஷ்டம் என்று அதை வாங்கி, புதிதாக மாணவர்களுக்கு வசதிகளும் செய்திருக்கிறார்கள். ஒரு உதாரணத்திற்காகச் சொல்லுகிறேன். பேரை வேண்டுமானாலும் சொல்லி விடுகிறேன்—காசி சர்வ கலாசாலைக்கு ஒதுக்கப்பட்ட பணம் செலவழிக்கப்பட்டதற்கு நாம் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம். டில்லியிலிருந்து பணம் கொடுப்பது பற்றாது. 3-வது ஐந்தாண்டுத் திட்டம் சம்பந்தமாக பூர்வாங்க வேலைகள் நடத்துவதைப் பற்றிச் சொல்லுகிறார்கள். நானும் திரு. வி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்

[Sri M. A. Muthiah Chettiar] [5th February 1959

11-20 a.m. களிடம் பேசிக் கொண்டிருந்தேன். அவர்களும் அது தொடங்கப்போவ தாகச் சொன்னார்கள். வருகிற ஆறு மாதங்கள், ஒரு வருஷத்திற்குள் நமது அரசாங்கத்தார் அதிக முயற்சி எடுத்து, நமது ராஜ்யத்திற்குப் பெரும் தொகை கிடைக்கவேண்டுமென்று சொல்லவேண்டும்.

இப்பொழுது நீர்ப்பாசனத்தைப்பற்றி முக்கியமாக நான் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரையின்மீது முதன் முதலாகத் திருநெல்வேலி கனம் அங்கத்தினர் பேசியபோது, " மதுரைக் குத் தெற்கே கவனிக்கப்படவே இல்லை " என்று சொன்னார்கள். நான் சொல்வேன்—தஞ்சாவூருக்குத் தெற்கே கவனிக்கப்பட வில்லை என்று. குறிப்பாகச் சொல்லவேண்டுமானால் திருச்சி, புதுக்கோட்டைக்குத் தெற்கே கவனிக்கப்படவில்லை. இங்கே ஒன்றும் செய்ய வில்லை. வடாற்காடு, தென் னாற்காடு ஜில்லாக்களுக்கு அந்தத் தண்ணீர் வராது. கோதாவரி, கிருஷ்ணா தண்ணீர் வந்தால்தான் அந்த ஜில்லாக்களுக்குப் பயன் ஏற்படும்.

பரம்பிக்குளத் திட்டத்தை எடுத்துக்கொள்வது சம்பந்தமாக கேரள அரசாங்கத்தாரோடு நடத்திய பேச்சு வார்த்தை அனுகூலமாக முடிந்திருப் பது பாராட்டத்தக்க விஷயம். பரம்பிக்குளத் திட்டம் வருகிற அளவுக்கு நல்லது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ சின்னத்துரை அவர்கள் சொல்வது போல் புஞ்சை உற்பத்தியையும் கவனிக்க வேண்டியதுதான். ஆனால், இப்பொழுது தற்செயலாக சமீபத்தில் பருத்தி உற்பத்தி இந் தியாவில் அதிகமாக ஏற்பட்டதும் கனம் அங்கத்தினருக்குத் தெரிந்திருக் கும். ஆகவே, உடனடியாக, குறைந்தது இரண்டு மூன்று வருஷங் களுக்காவது நெல் வெள்ளாமையை அதிகரிப்பதிலே நாம் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகும் என்று நன்றாகத் தெரிகிறது. முன்பு 25 லட்சம் பேல் பருத்தி உற்பத்தி ஆகிக்கொண்டிருந்தது. இப் பொழுது 55 லட்சம் பேல், 80 லட்சம் பேல் என்று பருத்தி உற்பத்தி உயர்ந்து கொண்டு போவதும், அப்படி அதிகம் உற்பத்தி ஆனதின் காரணமாக இந்த இரண்டு வருஷங்களாக பருத்தி சீரழியும் நிலைமை யும் நண்பர் சின்னதுரை அவர்களுக்கு நன்றாகத் தெரியும். புது மில் வரப் போவதில்லை என்பதும் நன்றாகத் தெரிந்த விஷயம். ஆகவே, நெல் உற்பத்தியை அதிகரிப்பதற்கான வகையிலே நீர்ப்பாசன வசதி செய்துகொடுப்பது நல்ல காரியம். பல்லடம் போன்ற பகுதிகளுக்கு வசதி வேண்டியது தான். அங்கு வசதி வேண்டாமென்று நான் கண்டித்துச் சொல்லவில்லை. ஆனால், எங்கள் பகுதியில் ஒன்றும் செய்யவில்லை என்று சொல்கிறேன். மந்திரி அவர்களுக்குத் நன்றாகத் தெரியும். மதுரைக்குத் தெற்கே ராஜபாளையம், திருநெல்வேலி பகுதிகளில், மொத்தமாக மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களில் இந்த வருஷம் சாதாரண கண்மாய்களின் கீழ் வெள்ளாமை கூட சரியாயில்லை. மழை குறைச்சல் தான் இதற்குக் காரணம். கண்மாய் மராமத்து செய்யப்படாமல் பாக்கி இருக்கிறது.

நீர்ப்பாசன வசதிபற்றி சொல்லும்போது, " எல்லாம் செய்து முடித் தாய் விட்டது " என்று பெருமை கொள்வதில் புண்ணியமே இல்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டம் வந்தபோது, " திட்டம் போடுவதற்கு முன்ன மேயே வேலைகள் நடந்தேறி விட்டன, அவைகளைத் தான் திட்டங்களில் சேர்த்தோம் " என்று பெருமையாகச் சொல்லப்பட்டது. அதன் காரண மாக சென்னை ராஜ்யத்திற்கு 25, 30 கோடி ரூபாய் தான் செலவழிக்கப் பட்டது. ஆனால், உத்தரப் பிரதேச ராஜ்யத்தில் 125 கோடி ரூபாய் வரையில் செலவிடப்பட்டது. இப்படி நான் சொல்லும்போது, ஏதோ ஹிந்தி-தமிழ் வாக்குவாதத்தில் இறங்கிப் பேசுகிறேன் என்று தோன்ற லாம். அப்படி ஒன்றுமில்லை. இப்பொழுது ஹிந்தி வேண்டாம் என்பது பற்றி எல்லோருமே பேசுகிறார்கள். ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி முதலில் ஆரம்பித்தார். ஆகவே, சிரமமே இல்லை.

ஆகவே, நமக்கு 100 கோடி ரூபாய் செலவில் நீர்ப்பாசன வசதி செய்ய வேண்டியிருக்கிறது. கோதாவரி, கிருஷ்ணா திட்டத்தை எடுத்துக் கொண்டால் எத்தனை கோடி ரூபாய் தேவைப்படுமோ தெரியவில்லை. 300 கோடி, 500 கோடி வரையில் கூட தேவைப்பட்டாலும் தேவைப்படலாம்; எப்படியிருந்தாலும் அந்தத் திட்டம் வந்தால்தான் சென்னைக்குக் குடி

தண்ணீர் வசதி நல்ல முறையில் ஏற்பட முடியும். அந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்று சென்ற முப்பது ஆண்டுகளாக நான் சொல்லிக்கொண்டு வருகின்றேன். வடாற்காடு, தென்னாற்காடு ஜில்லாக்களைப் பொறுத்தவரையில் கோதாவரி, கிருஷ்ணா தண்ணீர் வந்தால் தான் பாசன வசதி ஏற்பட முடியுமே தவிர, வேறு எந்தவிதமான முறையிலும் ஏற்படுவதற்குச் சந்தர்ப்பமே இல்லை. கோதாவரி, கிருஷ்ணா நதிகளின் தண்ணீர் ஐந்து சத விகிதம் கூட உபயோகப்படுத்தப்படாமல் சமுத்திரத்தில் வீணாகக் கலக்கிறது. ஆந்திர அரசாங்கத்தாரும் நம்முடன் இப்பொழுது சமூகமான முறையில் இருக்கிறார்கள். கோதாவரி, கிருஷ்ணா தண்ணீரை சென்னை ராஜ்யத்திற்குப் பயன்படுத்துவது சம்பந்தமாக டில்லிக்கு வந்து சமரசம் செய்து கொள்வதற்கும் அவர்கள் தயாராய் இருக்கிறார்கள். நம்முடைய அமைச்சர்கள் முயற்சி செய்யவில்லை என்று நான் சொல்லவில்லை. முயற்சி செய்கிறார்கள். மேலும் மேலும் அவர்கள் தொடர்ந்து முயற்சி செய்வதற்கான வகையிலே சட்டசபையிலும் அவர்களுடைய முயற்சிக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்பதற்காக நான் இப்பொழுது பேசுகிறேன். அவர்கள் முயற்சி செய்யவில்லை, கவனிக்கவில்லை என்பதற்காக நான் ஏதோ புதிதாகவோ நூதனமாகவோ ஏதோ சொல்வதாக நினைக்க வேண்டாம். சட்டசபை அங்கத்தினர்கள் இதுபற்றி இங்கே சொல்வது கூடாதென்றால், சட்டசபையே வேண்டியதில்லையே, மந்திரிகளே போதுமே. "சட்டசபையிலே சொல்கிறார்கள், வற்புறுத்துகிறார்கள், கேள்வி கேட்கிறார்கள், ஏதாவது செய்தாகவேண்டும்" என்று அவர்கள் எடுத்துச்சொல்வதற்கு இது உதவும் அல்லவா ? பத்து பேர் வலியுறுத்தினால், காரியங்களை எடுத்துச் சொல்பவர்களுடைய கை பலப்படும். ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்களும், ஸ்ரீ அண்ணாதுரை அவர்களும இன்னும் இதர கட்சிகளைச் சேர்ந்தவர்களும் இதை வற்புறுத்தினால் மேலும் நல்லதுதான். ஏனென்றால், மக்களுக்குச் சாப்பாட்டுக்கான பிரசனை என்பது எல்லாக் கட்சிக்குப் பொதுவானது. அதிலே எல்லோரும் ஒரே கட்சியாகத்தான் செயல்படவேணடும். அமைச்சர்களுடைய கையைப் பலப்படுத்துவ்தற்காகவே இவ்வளவும் சொல்கிறேன். நமது நிதி அமைச்சர் அவர்கள் அடிக்கடி டில்லிக்குப் போய் வருகிறார். முதல அமைச்சரும் டில்லிக்குப் போய் வருகிறார். தேசீய வளர்ச்சிக் கவுன்சில் கூட்டத்தில் நன்றாகப் பேசுகிறார்கள். அவர்கள் சொல்வதற்கு மதிப்பு இருக்கிறது. அத்தகைய சந்தர்ப்பங்களை அவர்கள் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமென்று சொல்கிறேன்.

சென்ற 6, 7 வருஷங்களாக நான் ஒரு விஷயத்தைப்பற்றிச் சொல்லி வந்திருக்கிறேன். ராமநாதபுரம் ராஜா அவர்கள் மந்திரியாக இருந்த போது, அவர் பதில் அளித்து, அது சட்டசபை நடவடிக்கைகளில் அச்சிடப் பட்டிருக்கிறது. அச்சிடப்பட்டதோடு நின்றுவிடுகிறது. சட்டசபையில் அங்கத்தினர்கள் அனேக விஷயங்களைப்பற்றிப் பேசுகிறார்கள். அத்தனைக்குமாகச் சேர்த்து அமைச்சர்கள் பதில் சொல்லும்போது, "எல்லாவற்றையும் கவனித்து விடுகிறோம்" என்று சுருக்கமாகச் சொல்லிவிடுகிறார்கள். பிறகு, என்ன ஆயிற்று என்று தெரிந்துகொள்ளமுடிவதில்லை. சட்டசபையில் குறிப்பிட்ட ஒரு விஷயத்தின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று சம்பந்தப்பட்ட அங்கத்தினர்களுக்கு அறிவிக்கப்படுவதில்லை. ஆகவே நான் யோசனை சொல்வதென்னவென்றால், சட்டசபையில் அங்கத்தினர்கள் பேசிய விஷயங்கள் பற்றி ஒரு ஜாபிதா போட்டு, அவை ஒவ்வொன்றின் மீதும் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பது பற்றி பின்னால் அறிவிக்கப்படவேண்டும். அங்கத்தினர்கள் கேள்வியாகப் போட்டால், அதற்கென்று ஒரு பைல் ஆரம்பித்து, வேண்டிய தகவல்கள் சேகரித்து சட்டசபையில் பதில் அளிக்கப்படுகிறது. பயனுள்ள வகையில் இருக்கிறது. ஆனால், ஸ்பீச் செய்வதிலே அர்த்தமில்லாமல் போய்விடுகிறது. ஏனென்றால், செய்யப்பட்ட பிரசங்கத்தில் கண்டுள்ள விஷயங்களுக்கான பதில் அளிக்கப்படுவதில்லை. கேள்வி போடுவதிலே ஏற்படுகிற பயன் கூட "ஸ்பீச்" செய்வதிலே ஏற்படுவதில்லை. எல்லா அங்கத்தினர்களுடைய உரைகளுக்கும் பதில் அளிக்கும் வரையில், "அங்கத்தினர்கள் சொல்லிய யோசனைகள் பற்றி சந்தோஷத்தையும், வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்." என்று சொல்வது மந்திரிகளுக்கு சகஜமாகப் போய்

[Sri M. A. Muthiah Chettiar] [5th February 1959

விட்டது. இம்மாதிரி முப்பது வருஷங்களாக நான் பார்த்து வருகிறேன். அது வரவர ஜாஸ்தியாகியிருக்கிறது. வேறு ஒன்றுமில்லை. "மெம்பர்கள் எல்லோருக்கும் வந்தனம் ; ஆலோசனைகளை கவனிக்கிறோம்" என்று சொல்கிறார்கள். அவ்வளவுதான். சட்டசபை அங்கத்தினர்களைக்கொண்ட பல சட்டசபைக் கமிட்டிகள் நிறுவப்படுகின்றன. ப்ரிவிலெஜெஸ் கமிட்டி மாதிரி எத்தனையோ கமிட்டிகள் இருக்கின்றன. அவைகளைப்போல், சட்டசபையில் பிரசங்கம் செய்யக்கூடியவை பற்றி அரசாங்கத்தினிடமிருந்து பதில்களை வருவிப்பதற்கும் ஏதாவது செய்யலாம். இங்கே பல கட்சித் தலைவர்கள் இருக்கிறார்கள். ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார், ஸ்ரீ அண்ணாதுரை, ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்களுக்கெல்லாம் சொல்கிறேன். அவர்கள் பிஸினஸ் அட்வைசரி கமிட்டிக் கூட்டத்தில் சொல்லி, சட்டசபையில் பேசிய விஷயங்கள் பற்றி ஜாபிதா போடச் சொல்லவேண்டும். ரிஜிஸ்டர் மெயின்டெயின் பண்ணச் சொல்லவேண்டும். இதையெல்லாம் செக்ரடேரியட் கிளார்க் ஒருவர் செய்து விடலாம். அங்கத்தினர்கள் சொல்லியதில் அர்த்தம் இல்லை என்று ரிஜிஸ்தரில் பதிவு செய்யும் கிளார்க்குக்கே தோன்றுமானால், அதை விட்டுவிட்டும். பொதுவாக கவனிக்கவேண்டிய விஷயமாக இருந்து, அதுபற்றி அங்கத்தினர்கள் யோசனை சொன்னால், அதை லிஸ்டு போட்டு, ரிஜிஸ்தரில் பதிவு செய்து, அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று நோட் போட்டு, சம்பந்தப்பட்ட டிபார்ட்மெண்டுக்கு அனுப்ப வேண்டும். டிபார்ட்மென்டார்களும் அதைப் பரிசீலனை செய்து, சம்பந்தப்பட்ட மந்திரிகளுக்கு அனுப்பி, அவர்கள் இதைப் பற்றி கவனித்து முடிவு செய்யவேண்டும். செய்ய முடிந்தால் செய்யலாம். இல்லாவிட்டால், அதற்கான காரணங்களை சட்டசபை அங்கத்தினர்களுக்குப் பின்னால் தெரிவிக்கலாம். பின்னால் ஒரு சமயம் சட்டசபையில் இது சம்பந்தமான பிரச்னைகள் எழுப்பப்படும்போது, ஏற்கெனவே கவனிக்கப்பட்டதுபற்றி எடுத்துச்சொல்லலாம். அப்படிப்பட்ட ஒரு முறை இல்லாவிட்டால், சட்டசபையில் அங்கத்தினர்கள் பேசுவதற்கு அர்த்தமில்லாமல் போய்விடுகிறது. இப்படிப்பட்ட ஒரு யோசனையை நான் பலதடவை இந்தச் சபையில் சொல்லியிருக்கிறேன். அதில் கவனம் செலுத்தவேண்டும்.

ராமனாதபுரம் ராஜா அவர்கள் மந்திரியாக இருந்தபோது சொன்னார்கள். ஐந்தாறு வருஷங்களாக எங்கள் பகுதியில் அனேகமாக மழை இல்லை. கேஜ் கூட பார்க்காமல் இருந்து விடுகிறார்கள். திருச்சி, மதுரைக்கு அருகே கொட்டம்பள்ளி திட்டத்திற்கு ஒன்றரை அல்லது இரண்டு கோடி ரூபாய் செலவு ஆகுமென்றும், அப்படி செலவு செய்தால், 25 ஆயிரம் ஏக்கருக்குத் தண்ணீர் வரக்கூடிய வசதி இருக்கிறது என்றும், தெரிவிக்கப்பட்டது. சிங்கம்புணரி, திருப்பத்தூர் பகுதிகளுக்கு வசதி இல்லாமலிருக்கிறது. மழை பெய்வது பற்றி கணக்கு எடுக்கிறோம் என்று சொன்னார்கள். அதுபற்றி நடவடிக்கை எடுக்கப்படாமலிருக்கிறது. ஒன்றரை கோடி ரூபாய்ச் செலவில் அந்தத் திட்டத்தை நிறைவேற்றி விடலாம். அதைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

வைகையிலே இனிமேல் தண்ணீர் இல்லை. அப்படி இருந்தும் மானாமதுரை வாசிகள் தகராறு செய்கிறார்கள். அணை போடுவதற்கு முன்னால் வைகைத் தண்ணீர் சமுத்திரத்திற்கே போவது இல்லை. அது ஒரு புறம் இருக்கிறது. ராஜபாளையம், திருநெல்வேலி பக்கத்திலே தண்ணீர் கொண்டு போகிற பெரிய திட்டத்திற்கு சுமார் 15 கோடி ரூபாய் செலவாகும் என்று சில வருஷங்களுக்கு முன்னால் மதிப்பிடப்பட்டது. இப்பொழுது 50 முதல் 60 கோடி ரூபாய் வரையில் செலவாகும் என்பதில் சந்தேகம் இல்லை. 100 கோடி ரூபாயையும் எட்டி விடலாம். நம் அம்மையார் அவர்கள் சொன்னதுபோல், அந்தத் திட்டம் வந்தால், திருநெல்வேலி, இராமனாதபுரம், மதுரை ஜில்லாக்களின் எல்லாப் பகுதிக்கும் தண்ணீர் வரக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. ஆகையால், அதை உடனடியாகக் கவனிப்பார்கள் என்று நம்புகிறேன். அந்தத் திட்டத்தை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே கட்டாயமாக சேர்த்துவிடவேண்டும். அப்படிச் சேர்ப்பதற்கு முன்னால், சென்னை ராஜ்ய சர்க்கார் செலவிலேயே 30 லட்சம் அல்லது 50 லட்சம் செலவு செய்து, திட்டத்தைப்பற்றி ப்ரெலிமினரி இன்வெஸ்டிகேஷன் செய்து வைக்கவேண்டும். ப்ரெலிமினெரி இன்வெஸ்டிகேஷ

5th February 1959] [Sri M. A. Muthiah Chettiar]

னுக்கு ஆகும் செலவை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து பெறவேண்டுமென்று காத்திருந்தால், இந்தத் திட்டம் நிறைவேற்றுவதற்கான வகையில் அதை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க முடியாமலே போய்விடலாம். ஆகவே, நாமே இதை இன்வெஸ்டிகேட் செய்து, தயாராக வைத்திருந்து, மூன்ருவது திட்டத்தில் சேர்க்க ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்தத் திட்டத்திற்கு 50 முதல் 60 கோடி ரூபாய் வரையில் செலவாகும் என்று நினைக்கிறேன்.

கோதாவரி, கிருஷ்ணு திட்டம் செங்கற்பட்டு, தென்ஞற்காடு, வடாற்காடு ஜில்லாக்களுக்குப் பயன்படும். அதைக் கவனிக்கவேண்டும். இப்பொழுது உடனடியாக விசேஷமாகக் கவனிக்க வேண்டியது திருச்சி, புதுக்கோட்டைப் பகுதியாகும். அதுபற்றி எழெட்டு வருஷங்களாகச் சொல்லி வந்திருக்கிறேன். காவிரித் தண்ணீரைப் புதுக்கோட்டைப் பக்கம் திருப்பி கால்வாய் வெட்டிக்கொண்டு போகிருர்கள். முப்பதாயிரம் எக்கருக்குப் பயன்படும் என்று சொல்கிருர்கள். மந்திரி ஸ்ரீ ராமையா அவர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு விஷயம் தெரியும். லெவல் இல்லை என்று புதுக்கோட்டைக்குக் கிழக்கே அந்தக் கால்வாய் போகிறது. மேற்கே போகவில்லை. மேற்கே போவதற்கு இன்னெரு கால்வாய் வெட்ட வேண்டும். இரண்டிப் பாளையம் கரூர் பக்கத்தில் இருக்கிறது. ஈரோடு பக்கம் கால்வாய் வெட்டினுல், திண்டுக்கல், மணப்பாறை வரையில் போய், புதுக்கோட்டைப் பக்கம் போய், தேவகோட்டைக்குக் கீழேயும் தொண்டிக்குக் கீழேயும் சேர்ந்து கொள்ளலாம். இரண்டு கால்வாய்கள் வெட்டினுல் தண்ணீர் வரும் என்று சொல்கிருர்கள். அதையும் கவனிக்கவேண்டும்.

முப்பதாயிரம் எக்கருக்கு மட்டும் தண்ணீர் வசதி செய்து கொடுத்தால் மட்டும் புண்ணியம் இல்லை. காவேரியில் நான்கு வருஷங்களுக்கு ஒரு தடவைதான் தண்ணீர் தட்டுப்பாடு இருக்கிறது. அப்படிப்பட்ட காலங்களில் ஒரு வருஷம் பஞ்சமாக இருக்கத் தயாராய் இருக்கிருர்கள். நான் ஒரு யோசனை கூற விரும்புகிறேன். தஞ்சாவூர் அங்கத்தினர்கள் கொஞ்சம் பொறுமையாக இருக்க வேண்டும். கோபப்படாமலும் இருக்கவேண்டும். பிரசாரம் செய்யாமலும் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது விவசாய நிபுணர்கள் சொல்கிருர்கள்—நிலத்தில் தண்ணீர் ரொம்ப நேரம் இருந்தால் உற்பத்தி குறைந்து விடும் என்று. இருபது நாளைக்கு ஒரு தடவை நிலம் சற்று காயும்படி விட்டு, அதில் பசுந்தாள் உரம், அல்லது கெமிகல் பர்ட்டிலைசர்கள் போட்டு பிறகு தக்க காலத்தில் தண்ணீர்ப் பாய்ச்சினுல், பயிர் நன்ருக வளருவதற்கும், உற்பத்தி அதிகரிக்கவும் முடியும் என்று நிபுணர்கள் சொல்கிருர்கள். ஆனுல், தஞ்சை ஜில்லாவுக்கு எப்பொழுது போனுலும் தண்ணீர் நிரந்தரமாக இருக்கிறது. அதனுல் உற்பத்தியும் குறைச்சலாக இருக்கிறது என்று சொல்கிருர்கள். தண்ணீரைக் குறைத்தால் உற்பத்தி பெருகும் என்று நான் சொல்வதை நம்பவேண்டாம். ஆனுல், விவசாய டிபார்ட்மெண்ட், ரிசர்ச் டிபார்ட்மெண்ட் மூலம் அரசாங்கம் உணர்ந்துகொண்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். நிதி அமைச்சர் அவர்கள் சொன்ஞர்கள், இலாகா மூலமாகவும் ரிசர்ச் செய்து கொண்டிருப்பதாக. அந்த ரிசர்ச்சை சீக்கிரம் பூர்த்தி செய்து, அதுவும் பல இடங்களிலே செய்து, தீர்மானத்திற்கு வந்து, தஞ்சை ஜில்லா வாசிகளும் அதிலுள்ள நன்மையைப் புரிந்துகொள்ளும்படிச் செய்து, அதை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். தஞ்சை ஜில்லாவுக்குத் தண்ணீரைக் குறைத்துவிட்டார்கள் என்று "எலெக்ஷன் டாக்டிக்ஸ்" ஸாக யாரும் உபயோகித்துக் கொண்டுவிடக்கூடாது, அதனுல் வோட்டுத் தகராறு வேண்டாம் என்பதற்காகத்தான் நான் இதுபற்றிய ஆராய்ச்சியின் முடிவை தஞ்சை ஜில்லாவாசிகள் புரிந்து கொள்ளும்படிச் செய்யவேண்டுமென்று சொல்கிறேன். விவசாய மகாநாடுகள் போட்டும், அங்கே விளக்கிச் சொல்லியும், ரிசர்ச் ஸ்டேஷன்களிலே 50, 100 எக்கரிலே வெள்ளாமை செய்து பிரத்தியட்சமாக பரீட்சித்துப் பார்த்து, அதன் பிறகு, தண்ணீர் மிச்சம் ஏற்பட்டால் இரண்டு லட்சம் எக்கருக்குப் பாசன வசதி ஏற்படும்படி காவேரித் தண்ணீரைக் கொண்டுபோகலாம் என்று சொல்கிருர்கள். இதையும் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri M. A. Muthiah Chettiar] [5th February 1959

12 noon. நான் இதைச் சொல்வதால் தஞ்சை ஜில்லா அங்கத்தினர்கள் கோபங் கொள்ளக்கூடாது. இதை வைத்துக்கொண்டு பிரசாரம் செய்யக் கூடாது. அப்படிச் செய்வதும் நியாயம் அல்ல. இதை விவரமாகச் சொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் இப்படிச் சொல்லுகிறேன். தஞ்சை ஜில்லா உபரி தண்ணீரைப்போல் பரம்பிக்குளம் தண்ணீர் வந்தால் பஞ்சப் பிரதேசமாகிய திருநெல்வேலி, ராமனுதபுரம் ஜில்லாக்களுக்கு எவ்வளவோ நன்மையாக இருக்கும். பரம்பிக்குளம் சம்பந்தமாக ஏதோ பேச்சு வார்த்தைகள் நடந்து வந்ததாகக் கேள்விப்படுகிறேன். அப்படி அந்த தண்ணீர் வந்தால் இந்த மூன்று ஜில்லாக்களுக்குள்ள சிரமம் நீங்கி விடும். நான் எல்லா இடங்களுக்கும் செல்பவன் அல்ல. இதைக் தெரிந்துகொண்டவர்கள் சொல்வதைக் கேட்டுத்தான் நான் சொல்லுகிறேன். ஆகவே இதையும் அரசாங்கம் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக கம்யூனிட்டி டெவலப்மெண்ட்டைப் பொறுத்தவரையில் புதிய திட்டம் வரப்போவதாகச் சொன்னார்கள். அதைப்பற்றி குறிப்பிடும்போது அதற்கு என்று இப்பொழுது தேர்ந்தெடுக்கப்பட்ட ஏரியாக்கள் அவ்வளவு சரியானதாக இல்லை என்றுதான் சொல்லலாம். எவ்வளவோ பஞ்சப் பிரதேசங்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் தேர்ந்தெடுத்திருக்கலாம். எவ்வளவோ பிற்போக்கான இடங்கள் இருக்கின்றன. அவைகளை எடுத்துக்கொண்டிருக்கலாம். பல இடங்களுக்கு இன்னும் ப்ளாக் டெவலப்மெண்ட் திட்டம் வராமலேயே இருக்கிறது. எந்த இடத்தையும் நான் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. பொதுவாகத்தான் சொல்லுகிறேன். பிற்போக்காக இருக்கக்கூடிய இடங்களை தேர்ந்தெடுத்திருந்தால் எவ்வளவோ நன்மையாக இருந்திருக்கும். அப்படிச் செய்யாததால் அதன் பயனை நன்றாக அடையமுடியவில்லை. இன்னும் எவ்வளவோ இடங்களில் பல கிணறுகள் வெட்ட வேண்டியதாக இருக்கிறது. அந்த பஞ்சப் பிரதேசங்களில் எவ்வளவோ கிணறுகளை வெட்டிக் கொடுத்தால் 300 அல்லது 400 அடி பவர் ட்ரில் போட்டு வெட்டிக் கொடுத்தால் அது அந்தப் பிரதேசங்களுக்கு எவ்வளவோ உபயோகமாக இருக்கும். திருப்பத்தூர் தாலுகாவில் முதன் முதலாக ஆரம்பித்தார்கள். அப்பொழுது அதன் பிரதிநிதியாக நான் இருந்தேன். ஆனால் நான் கேட்டு ஆரம்பிக்கவில்லை. அவர்களாகவே ஆரம்பித்தார்கள். பொதுமக்கள் கேட்டுக்கொண்டதால் அங்கே முதன் முதலாக ஆரம்பித்தார்கள். எப்பொழுதுமே நான் குறிப்பிட்டு பேசுவது இல்லை. பொதுப்படையாகத்தான் பேசிப் பழக்கம், அந்த முறையில் இப்பொழுது பேசுகிறேன். அது மந்திரிகளுக்கு நன்றாகத் தெரியும். இப்பொழுது நான் காரைக்குடி தொகுதியிலிருந்து வந்திருக்கிறேன். காரைக்குடியைப் பார்த்து விட்டு அது பெரிய டவுன் என்று சொல்லிவிடக்கூடாது. பக்கங்களிலுள்ள கிராமங்கள் எவ்வளவோ பஞ்சப் பிரதேசமாக இருக்கின்றன. அங்கேயெல்லாம் விவசாயம் செய்வதற்கு மக்கள் எவ்வளவோ கஷ்டப்படுகிறார்கள். அப்படிப்பட்ட பிரதேசத்தை ப்ளாக் அபிவிருத்தி பிரதேசமாக தேர்ந்தெடுக்கவில்லை. மறுபடியும் நான் சொல்லுகிறேன் பிற்போக்காக இருக்கக்கூடிய பிரதேசங்களைத்தான் இதற்கு என்று தேர்ந்தெடுக்க வேண்டும். கம்யூனிட்டி டெவலப்மெண்ட்டுக்கென்று 75 லட்சம் ரூபாய் வருவது குறைவு என்று நான் சொல்லவில்லை. இன்னும் டில்லியிலிருந்து கோடிக்கணக்கான ரூபாய் வரவேண்டும். இப்பொழுது கம்யூனிட்டி டெவலப்மெண்ட் வேலைகளை பஞ்சாயத்து ஏரியாக்களில் அமைக்கப்போவதாகச் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு அபிவிருத்தி வட்டாரத்திலும் ஒரு பஞ்சாயத்து யூனியன் அமைக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய திட்டத்தை எப்படி அமைக்கப்போகிறார்கள் என்பதை வரப்போகும் பட்ஜெட்டில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிடுவார் என்று எதிர்பார்க்கிறேன்.

நம் நாட்டில் மின்சார இலாகா ஓரளவு நன்றாக நடந்து வருகிறது. அதற்குக் காரணம் அதில் உள்ளவர்கள் அதற்கு உற்சாகம் காட்டுவதாலும், அதிலுள்ள இஞ்சினியர்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டு பெருமையோடு வேலை செய்வதாலும் அந்த இலாகா மேலும் மேலும் வளர்ச்சி அடைந்து வருகிறது. இன்னும் மேலும் மேலும் பல ஸ்கீம்கள் போட

வேண்டியதாகவும் இருக்கின்றன. இதைப் பற்றியும் கனம் நிதி அமைச்சர் அவர்கள் வரப்போகும் பட்ஜெட்டில் குறிப்பிடுவார் என்றே நம்புகிறேன். வரப்போகும் மார்ச்சு மாதம் 2-ம் தேதி கனம் நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட்டை சமர்ப்பிக்கப்போகிறார். அதற்குள் ஒரு மாத அவகாசம் இருக்கிறது. அதற்குள் இதைப்பற்றி கவனித்து இவைகளைப் பற்றியும் அதில் குறிப்பிடுவார் என்று நினைக்கிறேன். அதற்காகவே இப்பொழுது இவைகளைப்பற்றி அவருடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

நம்முடைய கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள் விஷயமாக கவனித்து அவர்களுடைய நிலைமையை அறிவதற்கு என்று ஒரு கமிட்டியை நியமிக்கப்போகிறார்கள். அதைக் கண்டு பாராட்ட வேண்டியதுதான். இதே ஊரில் யூனியன் கவர்ன்மெண்ட் உத்யோகஸ்தர்களுக்கு 140 முதல் 150 ரூபாய் சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஆனால் மதராஸ் கவர்ன்மெண்டில் வேலை பார்க்கிறவர்கள் அவர்கள் எம்.ஏ. பட்டதாரியாக இருந்தாலும் அவருக்கு 60 முதல் 70 ரூபாய்தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது. இரண்டு பேர்களும் ஒரே மாதிரியாகத்தான் சாப்பிடுகிறார்கள். ஆகவே இவர்கள் நியாயமாக ஒரு ஏற்பாடு செய்தால் எல்லோருக்கும் உபயோகமாக இருக்கும். அந்தக் கமிட்டி வெகு சீக்கிரமாகவே ஒரு முடிவுக்கு வரவேண்டும். ஒரே மாதத்தில் முடிவு செய்து விடலாம். அதில் நியமிக்கப்பட்டிருக்கும் ராமுண்ணி மேனன் அவர்கள் எல்லாம் தெரிந்தவர்தான். ஆகவே நாலைந்து நாட்களில் இதைப்பற்றி முடிவு எடுத்து வரப்போகும் பட்ஜெட் கூட்டத்தில் இதைப்பற்றி தெரிவித்து அதற்கு வேண்டியதையும் பட்ஜெட்டில் சேர்க்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். இப்பொழுது ஊட்டிக்குப் போகப்போவதாகச் சொல்லப்படுகிறது. அப்பொழுது அவர்கள் சந்தோஷமாக அங்கு போவதற்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்களும் திருப்தியாக அங்கே போவார்கள். நாம் எப்படி சந்தோஷமாக அங்கே போகப் போகிறோமோ அதைப்போலவே அவர்களும் அங்கே போவதற்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். அந்த அடிப்படையில் அதன் முடிவை அடுத்து வரும் பட்ஜெட் கூட்டத்திற்குள்ளாகவே தெரிவிக்க வேண்டும். ஆகவே மந்திரி சபை இவைகளையெல்லாம் நன்றாக பரிசீலனை செய்து அடுத்து வரும் பட்ஜெட் கூட்டத்திற்குள் ஒரு முடிவு எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால் பெருமையாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri N. MAHALINGAM** : கனம் சேர்மன் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையை ஆதரிக்கும் முறையில் சில வார்த்தைகளைச் சொல்வது அவசியமாக இருக்கிறது. கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் நம்முடைய சபையினுடைய கமிட்டிகள் மிக முக்கியமான பல முடிவுகளை, அகில இந்தியா பாராட்டக்கூடிய வகையில் பல, முடிவுகளை ஏகமனதாக செய்திருப்பதைக் குறித்து அவருடைய பாராட்டுதலை தெரிவித்திருக்கிறார். ஆனால் அவர் கொடுத்திருக்கக்கூடிய பாராட்டுதலை நாம் ஏகமனதாக இங்கே இருந்து ஏற்றுக்கொள்ளமுடியாத நிலைமையில் இருந்திருக்கிறோம். அதைக்கண்டு நாம் வருத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. ஆனால் விவாதத்தில் கலந்து கொள்வதற்கு எல்லா அங்கத்தினர்களும் வந்து இருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன், அவர்களை வரவேற்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

அடுத்தபடியாக முக்கியமாக நம்முடைய முதல் மந்திரி அவர்களுடைய மந்திரி சபையை நான் மிகவும் பாராட்ட விரும்புகிறேன். அவர் எடுத்துக் கொண்ட பெரும் முயற்சியினால்தான் பரம்பிக்குள திட்டம் ஒரு விதத்தில் உருவாகி இருக்கிறது. அவருடைய முயற்சியோடல்லாமல் அங்குள்ள இஞ்சினியரிங் இலாகாவிலுள்ள உத்யோகஸ்தர்களும், விசேஷமாக ஸ்ரீ ஆநந்த ராவ் அவர்களும் கடந்த இரண்டு வருஷங்களாக எடுத்துக்கொண்ட முயற்சியினாலும் சிரமத்தினாலும் தான் அது ஒரு விதத்தில் உருவாகி இருக்கிறது என்று சொல்லலாம். அந்த விஷயம் அங்கு பக்கத்திலுள்ள எங்களுக்குத்தான் நன்றாகத் தெரியும். அவர்களும் இந்த சந்தர்ப்பத்தில்

[Sri N. Mahalingam] [5th February 1959

பாராட்டுதலுக்கு உரியவர்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். இந்த திட்டம் கோவை ஜில்லாவிலுள்ள பல வரண்ட தாலுகாக்களுக்கு ஒரு பெரிய சுபிட்சத்தை உண்டாக்கும் என்பதில் சந் தேகமில்லை. ஆனால் பல்லடம் அங்கத்தினர் அவர்கள் இது சம்பந்தமாக பல சந்தேகங்களைக் கிளப்பியிருக்கிறார். அவர் சந்தேகத்தையேதான் சொல்லிக்கொண்டிருக்கிறார். ஏற்கெனவே 3½ லட்சம் ஏக்கர் பயனடை யும் என்று சொல்லப்பட்டது என்றும் அதன் பிறகு மூன்று லட்சம் ஏக்கர் என்றும், அதன் பிறகு இரண்டு லட்சம் என்றும் அதன் பிறகு இப் பொழுது இரண்டரை லட்சம் என்று சொல்லப்படுகிறது என்றும் அதனால் இதில் ஏதோ சந்தேகம் இருக்கிறது என்றும் தெரிவித்தார். முதலில் நாம் இதன் மூலம் 3½ லட்சம் ஏக்கருக்குத்தான் தண்ணீர் பாய்ச்ச வேண்டுமென்று திட்டமிட்டிருந்தோம். கேரள அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தை நடத்தியதில் அவர்களிருக்கும் சில இடங்களுக்கு தண்ணீர் பாய்ச்சுவதற்கு தண்ணீர் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டதால் இப்பொழுது 2½ லட்சம் என்று குறைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் பிரதேச விஸ்தரிப்பு குறைந்து போய்விட்டது. இதைக்கண்டு ஆச்சர்யப் படுவதற்கு இடம் கிடையாது. இப்பொழுது அரசாங்கத்தாரால் 2½ லட்சம் ஏக்கருக்கு தண்ணீர் பாய்ச்ச முடியும் என்று சொல்லப்படுகிறது. இதையே ஒரு கொள்கை அடிப்படையில் ஒப்புக்கொள்ளலாம். இதை கனம் அங்கத் தினர் புரிந்துகொள்ள முடியாமலிருப்பது ஆச்சர்யமாக இருக்கிறது. இப்படி தண்ணீர் 2½ லட்சம் ஏக்கருக்குப் பாயக்கூடிய நிலம் பூராவும் நஞ்சை அல்ல என்பது யாருக்கும் தெரியும். கொள்கை அடிப்படையில் இதைக்கொண்டு 2½ லட்சம் ஏக்கருக்கு தண்ணீர் பாய்ச்ச முடியுமா என் பதைப் புரிந்து கொண்டிருக்கவேண்டும். அப்படி இல்லாமல் குறை சொல்வதில் பயன் இல்லை. "ஆக்கப் பொறுத்தவன் ஆரப் பொறுக்க வேண்டும்" என்று சொல்வதுபோல் கொஞ்சம் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். நம்முடைய ஜில்லாவில் எல்லோரும் ஒற்றுமையாக இருந்து பாடுபடவேண்டும். அதில் ஒவ்வொருவரும் பங்கு கொள்ள வேண்டும். சர்வ கட்சியும் இதில் பங்கு கொள்ள வேண்டும். அப்படி பங்கு கொண்டால் நியாயமான முறையில் எல்லா தாலுகாக்களுக்கும் தண்ணீர் கிடைக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. அப்படிப்பட்ட நம் பிக்கை எங்கும் இருக்கிறது. எனக்கும் இருக்கிறது. ஆகவே இந்த பரம் பிக்குளம் திட்டம் சம்பந்தமாக நமது மந்திரி சபையையும் இஞ்சினியர் களையும் பாராட்ட வேண்டும் என்று சொல்லிக்கொண்டு இது சம்பந்தமாக என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

12 10 p.m. அடுத்தபடியாக கவர்னர் பெருமான் அவர்களது உரையில் நிலச்சீர் திருத்தத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறியிருக்கிறார்கள். இது சம் பந்தமாகச் சில வார்த்தைகளைச் சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். "இஸ்ரேல் தேசத்தில் அந்த தேசத்து நிலம் பொது உடைமையாக இருக்கிறது" என்று கூறினார்கள். இஸ்ரேல் தேசம் புதிதாக உண் டாக்கப்பட்ட தேசம். அதற்கு முன்னால் ஒருவருக்கும் அந்த நிலம் சொந்தமாக இருந்திருக்க முடியாது. ஆகவே அரசாங்கம் ஏற்பட்டவுடன் உடனடியாக நிலங்கள் எல்லாம் பொதுவுடமையாக இருக்க வேண்டு மென்று முடிவு செய்து அமுலுக்குக் கொண்டு வந்து இருக்கலாம். ஆனால் நம்முடைய நாட்டில் இருக்கக்கூடிய சூழ்நிலையில் திடீரென்று நிலங்களை எல்லாம் தேசிய மயமாக்கி விடுவது என்பது முடியாத காரியம். நடைமுறையில் கொண்டு வருவது சிரமம். இன்றைய தினம் அப்படி ஏதாவது நிலங்கள் தேசியமயமாக்கப்பட வேண்டுமென்றால் அதற்கு ஒரு எல்லை வகுக்கப்படவேண்டும். எந்தத் துறையிலும் எல்லை வகுப்பது மிகவும் அவசியம். சர்க்கார் ஊழியர் சம்பளப் பிரச்சனையானாலும் சரி, தொழிலாளர் பிரச்சனையானாலும் சரி, டாக்டர்கள் முதலியோர் சம்பள உயர்வுப் பிரச்சனையானாலும் சரி, அதற்கெல்லாம் ஒரு எல்லை நிர்ணயிக்கப் பட வேண்டும். இன்றைய தினம் அரசாங்கத்திலும் விவசாய பூமியி னுடைய எல்லையை, வரம்பை ரூபாய் 20,000 என்று நிர்ணயிக்க வேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். 20,000 என்பது என்ன கணக்கென்று கேட்கலாம். இன்று சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கும் ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள் மாதத்திற்கு 1,800 ரூபாய் சம்பளம்

5th February 1959] [Sri N. Mahalingam]

வாங்குகிறார்கள். நம்முடைய மந்திரிகளுடைய சம்பளம் 1,500 ரூபாயாக இருக்கிறது. எல்லோரும் மந்திரிகளாக ஆகி விட முடியாது. அந்த அளவு வருமானத்தைப் பெறுவதற்கு அவர்களுடைய துறைகளில் எல்லாம் சௌகரியம் இருக்கும்பொழுது விவசாய வருமானத்தை மட்டும் ஏன் குறைக்கவேண்டும்? ஆகவே விவசாய வருமானத்தின் எல்லையை ரூபாய் 20,000 என்று நிர்ணயிக்க வேண்டுமென்று குறிப்பிட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, கவர்னர் பெருமானது உரையில் மூன்றாவது திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய விவரங்களைச் சேகரித்துக் கொண்டு வருவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இரண்டாவது திட்டத்திலேயே, சில துறைகளில் நமக்கு வேண்டிய வசதிகள் பூர்த்தியாக்கப்படவில்லை. முக்கியமாக, பல பிரதேசங்களை இணைக்கும் ரயில்வே லைன்கள் போடப்படவில்லை. அதற்காக இங்கிருந்து சிபாரிசும் மத்திய சர்க்காருக்குச் செய்யப்பட்டது. அப்படியிருந்து அவைகளெல்லாம் இப்பொழுது எடுத்துக்கொள்ளப்படவில்லை. அத்துடன் திட்டத்தில் குறைவு ஏற்பட்டதன் காரணமாக திட்டமிடப்பட்ட சில இரும்புத் தொழிற்சாலைகளும் ஏற்படுத்தப்படவில்லை. ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது நம்முடைய நாட்டிற்குப் பல புதிய ரயில்வே லைன்கள் அவசியமென்று சிபார்சு செய்யப்படவேண்டும். அதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அதிகமாக ரயில்வே லைன்களை இங்கு போட முடியாவிட்டாலும், எக்ஸ்பிரஸ் பாதைகளை, ராஜ பாதைகளைப் போட வேண்டியது அவசியம் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது சிமெண்டுக்கு "செஸ்" அதிகமாக ஆக்கப்பட்டிருக்கிறது. சென்னையிலிருந்து திருச்சி, மதுரை, திருநெல்வேலிக்கும் சேலம், கோவை வழியாக கொச்சிக்கும் ரஸ்தா போட வேண்டும். இது தொழில்கள் பெருகவும், வியாபாரம் அபிவிருத்தியாகவும் உபயோகமாக இருக்கும். இப்பொழுது பல சமயங்களில் லாரி போக்குவரத்தில் விபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். மிகப் போதுமான விஸ்தீரணம் இல்லாததன் காரணமாகவே இந்த விபத்துக்கள் ஏற்படுகின்றன. இந்த எக்ஸ்பிரஸ் ரஸ்தாக்கள் நிறைவேற்றும் திட்டத்தை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்க வேண்டியது மிகவும் அவசியம் என்று குறிப்பிட விரும்புகிறேன். அதே போல பல உப தொழில்களையும் நம்முடைய மாகாணத்தில் ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியம்.

நம்முடைய ஜனத்தொகை சதுர மைலுக்கு 620 பேர் வீதம் இருக்கிறது. இவர்களுக்கெல்லாம் வேலை வாய்ப்பு கொடுக்க வேண்டிய பொறுப்பு நம்மிடம் இருக்கிறது. அவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க வேண்டுமானால் பல உப தொழில்களை நாம் ஆரம்பித்தால்தான் முடியும். ஆகவே, நம்முடைய மாகாணத்தில் பல உப தொழில்களை ஆரம்பிப்பதற்கு வேண்டிய திட்டங்களை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மின்சார இலாகாவையும், மின்சார அமைச்சரையும் பாராட்டுவது மிகவும் அவசியமாக இருக்கிறது. அதுவும் இந்த ஆண்டு மின்சார வெட்டு இல்லையென்று சொல்லும்பொழுது, பாராட்டுவதற்கு என்னுடன் பல அங்கத்தினர்களும் சேர்ந்து கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அதிலும் பல்லடம் அங்கத்தினர்கள் சேர்ந்து கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. பல பிரச்சனைகள் அடுத்த சில மாதங்களுக்கு வராத நிலைமை நமக்கு கிடைத்திருக்கின்றது. நமது அரசாங்கம் கிராமப் புறங்களுக்கு மின்சாரம் கிடைப்பதை மேலும் மேலும் அதிகப்படுத்த வேண்டுமென்பது .பாராட்டுதற்குரியது. வெறும் வீடுகளுக்கு மட்டும் கிராமங்களில் மின்சார வசதி கிடைத்தால் போதாது. தொழில்களுக்குக் கிடைப்பதற்குப் போதுமான அளவு மின்சார சக்தியை கிராமங்களுக்கு விஸ்தரிக்க வேண்டும். ஆகவே இவைகளை மனதில் கொண்டு மின்சார விஸ்தரிப்பை மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri N. Mahalingam] [5th February 1959

அடுத்தபடியாக, கல்வித் துறையில் சென்ற சில ஆண்டுகளாக நடந்து கொண்டிருக்கக்கூடிய விஸ்தரிப்பும், அதன் நடைமுறையும், நல்ல முறையில் நடந்துகொண்டு வருகிறது. அதற்கு முக்கியமான காரணம் அதை நிர்வகிப்பவர் ஒரு இளம் தலைவராக இருப்பதுதான், என்று கருது கிறேன். பாராட்டும்பொழுது, இப்பொழுது சமீபத்தில் சர்க்கார் கொள் கையை அமுலாக்குவதிலே சில கஷ்டங்கள் இருக்கின்றன என்று சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டதை நானும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். "க்ராண்ட்" கொடுக்கும் ஆரம்பப் பள்ளிகளில் எல்லாம் இனிமேல் சம்பளம் வாங்கக்கூடாது என்பதின் காரணமாக, பல பள்ளிகள் மூடப்படக் கூடிய நிலைமை வந்துவிடும் என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். சர்க்கார் அதனுடைய கொள்கையை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது தவிர முனிசிபாலிடிகளால் உயர்தரப் பள்ளி கள் நடத்தப்பட்டு வருகின்றன. இந்த முனிசிபாலிடிகளுக்கு சரியானபடி அரசாங்கம் எய்டெட் பள்ளிகளுக்குக் கொடுப்பது போல் "க்ராண்ட்" கொடுப்பது இல்லை. மூன்றாவது பாரம் வரை இருக்கும் எய்டெட் பள்ளி களுக்கு 100 ரூபாய் வரை வருமானமுள்ளவர் குழந்தைகள் சம்பள சலுகைக்குப் பதிலாக கிராண்டு கொடுப்பது என்று சர்க்கார் ஏற்படுத்தி இருக்கிறார்கள். ஆனால் இந்தச் சலுகையை முனிசிபாலிடி பள்ளிகளுக்குக் கொடுப்பது இல்லை. முனிசிபல் பள்ளிகளுக்கும் சர்க்கார் "க்ராண்ட்" கொடுக்க வேண்டுமென்பதை இச்சமயத்தில் வற்புறுத்திக் கூற விரும்பு கிறேன்.

முன்பு என்.ஜி.ஓ.-க்களுக்கு 12 ரூபாய் கொடுக்க வேண்டுமென்று உத்தரவு போட்டார்கள். அதை முனிசிபாலிடியில் வேலை பார்ப்பவர்களுக் கும் கொடுக்க வேண்டுமென்று உத்தரவு போட்டார்கள். ஆனால் சர்க்கார் அதற்கு ஈடாக முனிசிபாலிடிக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. அதனால் முனிசிபல் பட்ஜட் deficit பட்ஜட் ஆக வேண்டி ஏற்பட்டது. இப்பொழுது என்.ஜி.ஓ.-க்களுக்கு 5 ரூபாய் கொடுக்கிறார்கள். மறுபடியும் முனிசிபா லிடியில் பழைய நிலைமை ஏற்பட்டுவிடும். ஆகவே இந்த அதிகத் தொகையை முனிசிபாலிடிக்குச் சர்க்கார் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்.ஜி.ஓ. விஷயமாக சர்க்கார் இப்போது கமிஷன் நிய மித்திருப்பது மிகவும் காலதாமதமானது. ஒரே விதமான சம்பள விகிதம் இருக்க வேண்டியதுதான் அவசியம். எல்லாத் துறைகளிலும் ஒரு விதமாகத்தான் இருக்கவேண்டும். சில தொழிலில் அதிகமாக லாபம் வருகிறது என்று சுட்டிக்காட்டி டிரிப்யூனல் அதில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு அதிகமாகச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பு அளிக்கிறார்கள். இது சரியல்ல. லாபம் அதிகம் வந்தால் உற் பத்திப் பொருள்களின் விலையைக் குறைத்து பொது மக்களுக்கு நன்மை ஏற்படும்படியாகச் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் தான் வேலை செய்கிறவர்களைப் பொறுத்தவரையில்—எல்லாத் துறையிலும் ஈடுபட்டி ருப்பவர்களுக்குமிடையே ஒரு சமத்துவத்தை ஏற்படுத்த முடியும். ஒரு துறையில் லாபம் வருகிறது என்பதற்காக அந்தத் துறையில் ஈடுபட்டி ருப்பவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவது என்று போனால் பொரு ளாதார சமத்துவம் இருக்காது. நாளுக்கு நாள் பல்வேறு பிரச்னைகள் ஏற்பட்டுக் கொண்டே போகும். இதையெல்லாம் கவனித்து இந்தத் துறை யில் சர்க்கார் சீக்கிரம் நல்லதொரு முடிவை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, நான் கவர்னர் பெருமானின் உரையை ஆதரித்து முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. RAMACHANDRAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையில் நமது மாநிலத்தைப் பற்றிய பல திட்டங்கள் காணப்படவில்லை. காணப்படும் சில திட்டங்களிலும் தெளிவு இல்லாத நிலைமை காணப்படுகிறது. இதுவரையில் இந்தச் சபையில் அவர்கள் நிகழ்த்தி இருக்கும் உரை மூன்று. பழைய இரண்டு உரைகளில் காணப்பட்ட முற்போக்குத் திட்டங்கள் கூட இதில் காணப்பட வில்லை. இந்த உரையில் முன்னேற்ற திட்டங்களைப் பற்றிய குறிப்பு குறைவாகவே காணப்படுகிறது. இது நம் எல்லோருக்கும் ஏமாற்றத்தைத் தருகிறது.

5th February 1959] [Sri K. Ramachandran]

அதிலும் குறிப்பாகப் பருவ நிலை சரியாக இல்லாததனால் திருநெல்வேலி, ராமநாதபுரம் மாவட்டங்களில் கஷ்டமான நிலைமை இருக்கிறது என்ற குறிப்பு அவர் உரையில் காணப்படுகிறது. ஆனால் அவர்களுடைய கஷ்டமான நிலைமையைப் போக்க சர்க்கார் என்ன என்ன நடவடிக்கைகளை எடுக்கப் போகிறார்கள் என்று குறிப்பிடாமல் சந்தேகத்திற்கிடமானதாகவே விடப்பட்டிருக்கிறது ஏமாற்றத்தைத் தருகிறது. இந்த நிலைமை இன்றைக்கு ஏற்படவில்லை. விளைவு இல்லாத நிலைமை அந்தப் பகுதியில் வருத்தத்தைத் தந்து கொண்டிருக்கிறது. மாதக் கணக்காக அந்தப் பகுதி மக்கள் தஞ்சாவூர் ஜில்லாவிற்கும், மற்ற பகுதிகளுக்கும் சென்று கொண்டிருக்கிறார்கள். அரசாங்கமும் திட்டவட்டமான நடவடிக்கை எடுக்காமலிருப்பது வருந்துவதற்குரிய விஷயமாக இருக்கிறது. வழக்கம்போல் அறுப்பு அறுக்க செல்கிறார்கள் என்று வேறு சொல்கிறார்கள். இப்படிச் சொல்வதும் வேறு அந்தப் பகுதி மக்களின் மனதில் வருத்தத்தை உண்டு பண்ணுகிறது. தை மாதம் என்பது விவசாயிகள் கொஞ்சம் நிம்மதியாக இருக்க வேண்டிய காலம். கொஞ்ச நஞ்சம் விளைந்ததை வைத்துக் கொண்டு இருக்க முடியும். ஆனால் இந்த மாதத்திலேயே பல மக்கள் ஆயிரக்கணக்கில் வெளி மாகாணத்தில் வேலை செய்யப்போகிறார்கள். அறுத்து ஜீவனம் செய்யச் செல்லவில்லை. தங்கள் வயிற்றைக் கழுவுவதற்காகச் செல்கிறார்கள். இது சாதாரண உண்மை. இதை மறைத்து முரண்பட்ட கருத்துக்கள் அரசாங்கத்தின் தரப்பிலிருந்து வருகின்றன. அந்தப் பகுதியில் மழை இல்லாததனால் பல பிரச்னைகள். அதோடு புயல், வெள்ளம் சேதம் காரணத்தினால் பொருளாதார நிலையில் ஏற்கனவே பாதிக்கப்பட்டவர்கள். இந்தச் சமயத்தில் வரி பாக்கி வசூல் வேறு பெருந் தொல்லையாக அவர்களுக்கு இருக்கிறது. பல துறைகளில் கொடுக்கப்பட்ட கடன்கள் இன்றையதினம் வசூலிக்க வேண்டிய நிலையில் உள்ளது. இதனால் அந்தப் பகுதி மக்கள் மிகுந்த தொந்தரவுக்குள்ளாக்கப் படுகிறார்கள். முன்பு அது ஜமீன் பிரதேசமாக இருந்தது. அதோடு மழையை எதிர்நோக்கி இருக்கக்கூடிய மானாவாரிப் பிரதேசம். எந்த விதமான பஞ்சமும், பட்டினியும் ஏற்படும் என்று சொல்ல முடியாது. நான் கூறிக் கொள்ள விரும்புவது எல்லாம் தொடர்ந்து பல காலமாகச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த மக்களின் தொல்லையை நீக்க வழி செய்ய வேண்டும் என்பது தான். உண்மையில் அரசாங்கத்திற்கு இவ்விஷயத்தில் அக்கறை இருக்குமானால் ஈஸ்ட் ராமநாதபுரம் டிவிஷன் என்று பிரித்து அதை ஸ்பெஷல் டிவிஷனாக அபிவிருத்தி செய்வதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதுவும் இந்தச் சமயத்தில் என்ன என்ன முறையில் ரிலீப் மெஷர் கொடுக்கலாம் என்று சிந்திக்க வேண்டும். போக்குவரத்து வசதி அங்கே கிடையாது. ராஜபாட்டைகளைத் தவிர மற்ற பகுதியில் பாதைகள் இல்லை. இந்த மாதிரியான காலங்களில் மக்களுக்கு வேலை கொடுக்க தக்க வசதி செய்யலாம். எந்த விதமான திட்டங்களாக இருந்தாலும் உடனடியாகச் செய்ய வேண்டும். தற்காலிகமாக வரி வசூலை நிறுத்தி வைப்பதுடன் இவ்வருஷத்தில் வரி வஜா செய்ய வேண்டும். இதற்காக அரசாங்கக் கட்சியின் அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு கமிட்டியையாவது போட்டு அந்தப் பகுதிக்கு அனுப்பி ஆவன செய்ய வேண்டும்.

12-30 p.m.

அடுத்தபடியாக விளைவு அதிகமாக இருக்கிறது. இருந்தாலும் விலைவாசிகள் குறையவில்லை என்ற குறிப்பு கவர்னர் உரையில் தென்படுகிறது. இதற்கு அகில இந்திய ரீதியில் ஏதாவது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றாலும் நமது மாநில சர்க்காருக்கும் இதில் பொறுப்பு இருக்கிறது. உணவு தான்யங்களின் விலை ஏற்றத்தைத் தடுக்க இவர்கள் குறிப்பிடும் ஒரே ஒரு சாதனம் 2 லட்சம் டன் அரிசியை சர்க்காரே கொள்முதல் செய்யப்போகிறது என்பது தான். இரண்டு லட்சம் டன் அரிசி அவர்கள் கொள்முதல் செய்தால் அது எந்தெந்த விதத்தில் வினியோகம் செய்யப்படப்போகிறது என்பதை எல்லாம் நாம் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இதில் முக்கியமான காரணம் பல வருஷங்களாக நாட்டிலே விலைவாசிகள் அதிகமாக இருக்கிறதென்றால் இதற்கு நாம் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாத அளவு உற்பத்தி பெருக்கவில்லை என்று தெரிகிறது. இதனால்தான் இந்த விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை

[Sri K. Ramachandran] [5th February 1950

என்று நான் சொல்ல வேண்டியிருக்கிறது. அப்படி உற்பத்தி பெருக்க வேண்டுமானல் சீன, ஜப்பான் போன்ற நாடுகள் நமக்குப் பின்னல் சுதந்திரம் அடைந்தும் அவர்கள் நம்மைவிட அதிகமாக முன்னேறி இருக்கிருர்கள். சாதாரணமாக ஒரு ஏக்கருக்கு 3,600 பவுண்டு அரிசி விளைவிப்பதாகச் சொல்லுகிருர்கள். தொளாயிரம் பவுண்டு தான் நம்முடைய நாட்டிலே விளைகிறது. இந்த நிலையிலேதான் நாம் இருக்கிறோம். சைன தேசம் நமக்குப் பின்னல் சுதந்திரம் அடைந்திருக்கிறது. நம்மைவிட விளைச்சல் பெருகிக் கொண்டிருக்கிறது. ஜப்பான் நாட்டிலும் விளைவு அதிகமாக இருக்கிறது. எதனல் இந்த நன்மை ஏற்பட்டிருக்கிறது. அங்கே நிலச்சீர்த்திருத்த முறையிலே ஒரு திட்டவட்டமான கொள்கையைக் கடைப் பிடித்திருக்கிறது என்று தெரிகிறது. நம்முடைய அரசாங்கம் அம்மாதிரி திட்டவட்டமான கொள்கையை கடைப்பிடிக்க முடியாத நிலைமையில் இருக் கிறது. சென்ற மூன்று வருஷ காலமாக நிலச்சீர்த்திருத்தம் பற்றி கவர்னர் உரையிலே கண்டிருக்கிறது. ஆனல் சென்ற இரண்டு வருஷம் நிகழ்த்திய உரையை விட இந்த வருடம் அது மிகவும் ஏமாற்றத்தை அளித்திருக்கிறது. சென்ற வருஷஉரையில் நாம் ரொம்பவும் சீக்கிரமாக நிலச்சீர்த்திருத்தம் கொண்டுவரப்போகிறோம். முன்னல் இனிமேல் நிலங் களை வாங்குவதைத் தடுப்பதற்கு சட்டம் கொண்டுவரப்போகிறோம் என்று சொன்னர்கள். அதற்கு முந்திய வருஷ உரையிலே சொல்லப்பட்டது என்னவென்றல் இந்த நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதைக் கொண்டு வரப் போகிறோம் என்று. அதற்கு அடிப்படையாக விநோபாஜி கிராமதானம் அமைந்திருக்கிறது. இருநூற்றைம்பது கிராமங்கள் கிராம தானமாக பெற் றிருக்கிறோம் என்று சொன்னர்கள். ஆனல் அந்தச் சட்டம் வந்ததாகக் காணோம். இந்த நிலைமையிலே உணவு உற்பத்தி பெருகும் என்பது மிகவும் சிரமமானதாகத்தான் இருக்கிறது. விவசாய கூட்டுறவு ஸ்தாபனங்கள் சீன ஜப்பான் நாட்டிலே அதிகமாக இருக்கின்றன. சீனவிலே 75 சத விகிதம் விவசாயிகள் கூட்டுறவு முறையிலே இயங்கி வருகிருர்கள். இதனல் அங்கே உற்பத்திப் பெருக்கம் அதிகமாக இருக்கிறது. எப்படி இருந்த போதிலும் நிலவுடமை வரம்பு கட்டவேண்டுமென்ற கொள்கையை திட்ட வட்டமாக அரசாங்கம் கடைப்பிடித்து இந்த வருஷத்திலேயே கொண்டு வந்தால் அல்லாது உண்மையிலேயே இப்போது உற்பத்தி பெருக்குவது சாத்தியம் அல்ல என்று நான் சொல்லவேண்டியிருக்கிறது.

அடுத்தபடியாக கம்யூனிடி டெவலப்மெண்ட் புரோக்கிராம் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். இதில் சாதாரணமாக ஒரு கொள்கை என்னயிருக்கவேண்டுமென்றல் பிற்பட்ட பகுதிகளை நாம் முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்பதாகும். அப்படியெல்லாம் இந்த திட்டம் அமைந்திருந்தால் நாம் எல்லோரும் உண்மையிலேயே வரவேற்கக்கூடிய நிலைமையில் இருப்போம். குறைந்த பங்குத் தொகை மக்கள் செலுத்த வேண்டுமென்ற விதி இருந்தபோது பிற்பட்ட பகுதிகளைச் சேர்க்காமல் வளமான பகுதிகளைச் சேர்த்து விட்டு பங்குத் தொகை அதிகமாக வசூலிக்க விதி ஏற்பட்டிருக்கும்போது பின்னடைந்த பகுதிகள் சேர்க்கப்பட்டிருக் கின்றன. ஆகையால் இன்றைக்கு இருக்கும் நிலையில் சாதாரணமாக அந்த மக்கள் கொடுக்க வேண்டிய தொகையைக் குறைத்தால் தான் நலமாக இருக்கும். அப்படியின்றி மக்களுடைய தொகை பாதி பங்காக வும், 75 சத விகிதமாகவும் இருப்பதால் அந்தப் பகுதிகளில் தொடங்கப்பட்ட திட்டங்கள் நிறைவேருமல் இருக்கின்றன. என்ன கொள்கையை பிளாக் டெவலப்மெண்டில் அனுஷ்டிக்கிருர்கள் என்று நம்மால் புரிந்துக்கொள்ள முடியவில்லை. எடுத்துக்கொண்ட திட்டங்களில் எல்லாம் பொதுவாக சிப் பந்திகளுக்கு சம்பளம் அதிகமாக கொடுக்கப்படுகின்றதே தவிர உருப்படியான காரியங்கள் ஒன்றும் நடைபெறவில்லை. மேலும் பங்குத் தொகை கொடுக்க முடியாத கஷ்ட நிலைமையிலே தான் அங்கு இருக்கிருர்கள். பிற்பட்ட பகுதிகளிலே பங்குத் தொகையைக் குறைத்து இன்னும் திட்டங்களிலே சிரத்தையுடன் பூர்த்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நீர்ப் பாசன திட்டங்கள் பொருத்த வரையில் பரம்பிகுளம் தண்ணீர் கோயம்பத்தூர் ஜில்லாவுக்கும் உபயோகப்படும் என்று சொல்லுகிருர்கள். இதனல் இரண்டு லட்சத்தி 50 ஆயிரம் ஏக்கருக்கு பாசனவசதி கிடைக்கும் என்று சொன்னர்கள். இப்போது வைகைத் திட்டம் பூர்த்தி அடைந்து

5th February 1959] [Sri K. Ramachandran]

விட்டது. இதனால் 20 அல்லது 27 ஆயிரம் எக்கர் நிலத்திற்கு தண்ணீர் பாய்கிறது என்று சொன்னார்கள். இதைப்பற்றி சந்தோஷம் அடைகிறோம். ஆனால் இந்தத் திட்டத்தினால் வைகை நதி பாயக்கூடிய பிரதேசத்தில் பலன் ஏற்படவில்லை. அந்தப் பிரதேசங்களில் வாழும் மக்கள் மிகவும் வருத்தப்படுகிறார்கள். கிழக்கு ராமநாதபுரம் போய் பாய்ந்துகொண்டிருந்தத் தண்ணீர் இப்பொழுது இந்தத் திட்டத்தினால் தடைப்பட்டிருக்கிறது. இதனால் அங்கே இருக்கும் மக்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். வைகை அணைத்திட்டம் ஆரம்பித்த காலத்தில் அரசாங்கம் இந்தத் திட்டத்தால் வைகையில் வரக்கூடிய தண்ணீர் பாதிக்கப்படாது என்று உறுதி சொன்னார்கள். அப்படிச் சொல்லியது உண்மையானால் வைகையில் வழக்கமாக 2, 3 மாதங்களுக்கு வர வேண்டிய தண்ணீர் வர வேண்டும். அதைத் திட்டமிட்டு channalise செய்து கிழக்கு இராமநாதபுரம் பகுதிகளுக்குக் கிடைக்கும்படி அரசாங்கம் செய்யவேண்டும். உண்மையில் பார்க்கப்போனால் கிழக்கு ராமநாதபுரம் பயன் அடையவேண்டும். இந்த திட்டம் ஆரம்பித்து 4, 5 வருஷ காலமாகி இப்பொழுது கட்டிமுடிந்துவிட்டது. இரண்டு மூன்று வருஷங்களாக வைகையில் தண்ணீர் வருவதில்லை. வைகை திட்டத்தினால் நிச்சயமாக வைகையில் தண்ணீர் வருமா என்ற ஐயம் முன்பே ஏற்பட்டிருக்கிறது. நிச்சயமாக அந்தத் தண்ணீர் அடைப்பட்டுப்போய்விட்டது. கிழக்கு ராமநாதபுரம் பகுதியில் பழைய தண்ணீர் வரக்கூடிய அளவிற்கு தகுந்த வாய்க்கால்கள் அமைவதற்கான ஒரு திட்டம் போடுவதன் மூலம் இந்த பகுதி மக்களுக்கு உதவ முடியும். அதை அரசாங்கம் செய்துத் தா வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சமீபத்தில் வைகை திட்டத்திலிருந்து கிழக்கு ராமநாதபுரம் பகுதி அதாவது பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு 500 க்யூசக்ஸ் தண்ணீர் விடப்பட்டது. கால்வாய்களும் கண்மாய்களும் சீராக இல்லாத காரணத்தினால் அந்தக் காலுக்கு எப்படி தண்ணீர் பாய்வது என்று நடைமுறை இல்லாததால் தேவையில்லாத கண்மாய்களுக்கு தண்ணிர் பாய்ந்து வாடி வதங்கி இருக்கக்கூடிய பயிர்களுக்கு அந்தத் தண்ணீர் பாயக்கூடிய நிலைமையில் இல்லை. மதிப்பிற்குரிய மானாமதுரை அங்கத்தினர்கூட ஏதோ இளையாங்குடி கண்மாய்க்குத்தான் தண்ணீர் கொண்டுபோக வேண்டுமென்பது தன் இலட்சிய நோக்கமென்று சொன்னார்கள். அது தவறு என்று சர்க்கார் உத்தரவிலிருந்து தெரியவந்தது. "சாமி வரங்கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்கவில்லை" என்ற பழமொழி இந்த நாட்டிலே சொல்லுவதுண்டு. பரம்பிக்குளம் திட்டம்பற்றி சொன்னபோது எனக்கு ஞாபகம் வந்தது. தண்ணீர் வந்து 10 நாள் ஓடியது. பூராவும் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் செல்ல வேண்டும் என்பது அரசாங்கத்தின் திட்டம். ஆனால் குறுக்கே இருந்த மானாமதுரை பகுதியோடு நிறுத்த முயற்சிகள் செய்யப்பட்டன. தேவையில்லாத பகுதிகளுக்கு அக்கிரமமான முறையிலே தண்ணீர் விடப்பட்டது கண்டு வருத்தம் அடைகிறோம். இம்மாதிரி நிலைமை ஏற்பட்டால் தண்ணீர் கிடைக்கும் காலங்களில் அதை ஒழுங்கு செய்து எல்லாப் பகுதிகளுக்கும் கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

12-46 p.m.

குடிசைத் தொழில்களைப்பற்றி இந்தப் பிரசங்கத்தில் குறிப்பிடாமல் இருப்பதை நாம் கவனிக்க வேண்டியதாய் இருக்கிறது. காந்திஜி அவர்கள் சொன்னார்கள் "ஒரு பெரிய தொழிற்சாலை அமைத்து 1,000, 2,000 பேருக்கு வேலை கொடுத்துவிடுவதை விட அந்தந்த பகுதி மக்களின் வாழ்வை வளப்படுத்துவதற்கும், அவர்களின் பொருளாதார நிலைமையை சீர்ப்படுத்துவதற்கும் அந்தந்த பகுதியில் சிறு தொழில்கள் வளம்பெறவேண்டும்; அப்பொழுதுதான் அந்தந்த பகுதி மக்கள் பொருளாதார முன்னேற்றம் காணமுடியும், அந்த அடிப்படையில்தான் பல தொழில்கள் ஆரம்பிக்க வேண்டும்" என்று பல இடங்களில் பேசப்பட்டு வந்தது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் இதைப்பற்றி திட்டவட்டமான தகவல் எதுவும் கவர்னரவர்கள் உரையில் இல்லை. அந்த அடிப்படையில் பல தொழில்களை ஆரம்பிக்க வேண்டும் என்றெல்லாம் பல இடங்களில் பேசப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், இன்று அதுபற்றி திட்டவட்டமான அறிவிப்பு எதுவும் கிடைக்கவில்லை. "திட்டம் வந்துவிட்டது, திட்டம் வந்துவிட்டது" என்று நாம் சொல்லிக்கொண்டே போனால்;

கிராமவாசிகளும் மற்ற மக்களும் "திட்டம் வந்துவிட்டதென்றால், எனக்கு என்ன வந்துவிட்டது" என்று தான் கேட்கிறார்கள். இப்போது கிழக்கு ராமநாதபுரம் பகுதிக்குச் சென்று அங்கே "திட்டம் வந்து விட்டது" என்று சொன்னால் அங்குள்ளவர்கள் "எனக்கு என்ன வந்திருக்கிறது" என்று தான் கேட்பார்கள். அங்கே பெரிய தொழில்களும் இல்லை, சிறிய தொழில்களும் இல்லை. மக்கள் பெருமைப்படத்தக்க முறையில் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருவதற்குரிய எதையும் நாம் செய்யாமல் "திட்டம் வந்து விட்டது, திட்டம் வந்து விட்டது" என்று சொன்னால், அவர்கள் நாம் சொல்வதை நம்புவதில்லை. உதாரணமாக ராமநாதபுரம் பகுதியை எடுத்துக்கொண்டால், அங்கே எதுவுமேயில்லை என்றும் அங்கு வளம் இல்லை என்றும் நாம் நினைத்துக்கொண்டிருக்கக்கூடாது. அங்கே பனை மரங்கள் நிறைய இருக்கின்றன. பனை மரத்தின் மட்டைகளையும், ஓலைகளையும் கொண்டு பல பொருள்கள் செய்யலாம். அத்தகைய தொழில்களை நடத்தலாம். ஓரிடத்தில் ஒரு பேப்பர் மில்லுக்குச் சென்றிருந்தேன். அந்த ஆலையில் பனை மட்டையிலிருந்து காகிதங்களும் அட்டைகளும் செய்வதைப் பார்த்தேன். இத்தகைய தொழில்களை, பனை மரங்கள் அதிகமாக உள்ள ராமநாதபுரம் பகுதியில் செய்யலாம். எனவே தொழில் துறையைப் பொறுத்தவரையில், கவர்னர் பெருமான் உரையில் மக்களுக்குப் பயனளிக்கக்கூடிய இத்தகைய திட்டங்கள் காணப்படவில்லை.

கல்வித் திட்டத்தைப் பொறுத்த வரையிலும், கட்டாயக் கல்வி முறை எப்போது கொண்டுவரப்படும் என்று கவர்னர் பெருமான் உரையில் தெரிவிக்கப்படவில்லை. கட்டாயக் கல்வி முறை கொண்டுவரப்படும் என்று தான் அவருடைய உரையில் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர அது எப்போது கொண்டுவரப்படும் என்று சொல்லப்படவில்லை. அடிப்படைக் கல்வி முறையை எடுத்துக்கொண்டால், 5-வது வகுப்பு வரையில் தான் அடிப்படைக் கல்வி அளிக்கப்படுகிறது. அதற்கப்புறம் அந்த மாணவர்கள் எந்தக் கல்வியைப் பயிலுவார்கள் ? ஐந்தாவது வகுப்பு வரையுள்ள அடிப்படைக் கல்விக்கும் அதற்கு மேல் உள்ள கல்விக்கும் இணைப்பு இருக்கும் வகையில் எந்த ஒரு திட்டமும் வகுக்கப்படவில்லை ; அத்தகைய எந்த ஒரு திட்டமும் அறிவிக்கப்படவும் இல்லை.

அதற்கடுத்தபடியாக, என்.ஜீ.ஓ.-க்களுக்கு, நிவாரணமளிக்கும் வகையில் மாதம் 5 ரூபாய் கொடுக்கப்படும் என்று கவர்னர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பகுதியில் கவர்னர் அவர்கள் இன்னொரு விஷயமும் சொல்லியிருக்கிறார்கள். விலைவாசிகள் ஏறிக்கொண்டிருப்பதால் இடைக்கால நிவாரணமாக 5 ரூபாய் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார். இதைப் பார்த்து எல்லோரும் உண்மையிலேயே மிகவும் சந்தோஷப்பட வேண்டியது தான் ! ஏனென்றால், விலைவாசிகள் இப்போது தான் ஏறு முகமாக இருக்கின்றனவா ? அவைகள் போனவருஷம் உயரவில்லையா ? விலைவாசிகள் போன வருஷம் ஏறியதற்கு, போன வருஷம் சர்க்கார் இந்த உத்தியோகஸ்தர்களுக்கு என்ன நிவாரணம் கொடுத்தார்கள் ? இதையெல்லாம் பார்க்கும்போது இது வெறும் கண்துடைப்பாகத் தான் தெரிகிறது, இதை உண்மையிலேயே நிவாரணம் என்று சொல்ல முடியாது. ராஜ்ய சர்க்கார் என்.ஜீ.ஓ.-க்களின் சம்பளத்தை உயர்த்துவது சம்பந்தமாக ஆலோசனைகள் கூறுவதற்கான கமிஷன் ஒன்றை நியமித்திருப்பதாகவும் கவர்னர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அந்தக் கமிஷன் முடிவை சர்க்கார் அறிந்து இந்த உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு அளிக்க முன்வர வேண்டும். திட்டங்களை நிறைவேற்றிவைக்கும் சக்தி சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் கையில் தான் இருக்கிறது. அவர்களை அதிருப்தியுறும் நிலையிலும் பட்டினி கிடக்கும் நிலையிலும் வைத்திருந்தால் திட்டங்களை நிறைவேற்ற முடியும் என்று நான் நம்பவில்லை. அவர்கள் எப்படி இருந்தாலும் திட்டங்களை நிறைவேற்றிவிடலாம் என்று நாம் வாதத்திற்காகச் சொல்லலாம் ; ஆனால் நிதரிசனமாகப் பார்த்தால் அது சாத்தியமல்ல. ஆகவே கூடியசீக்கிரத்தில் அக் கமிஷனின் சிபாரிசுகளைப் பெற்று அவைகளுக்கிணங்க இந்த உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களை உயர்த்த வேண்டும் என்று சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

5th February 1959] [Sri K. Ramachandran]

கொண்டுவரப்பட இருக்கும் மசோதாக்களைப் பற்றிய வரையில், நாம் பிரமாதமான பாராட்டுதல் எதுவும் தெரிவிப்பதற்கில்லை. இந்த வருஷம் கவர்னர் அவர்களுடைய உரையில் நான் ஒரு முக்கியமான விஷயத்தை எதிர்பார்த்தேன். இரண்டு மூன்று வருஷங்களாகவே கிழக்கு ராமநாத புரத்தில் 4—5 தாலூகாக்களில் குறிப்பிட்ட ஒரு பிரச்னை இருந்துவருகிறது. அந்தப் பிரச்னையைப்பற்றி, கனம் மந்திரிகளிடத்தில் பொதுமக்களும் மற்ற வர்களும் எடுத்துக்கூறி வந்திருக்கிறார்கள். அதைப்பற்றி நானும் இந்த சபையில் பன்முறை சொல்லிவந்திருக்கிறேன். அது குளங்கோர்வை விவ சாயப் பிரச்னை. இந்த வருஷமாவது அது சம்பந்தமாக ஒரு சட்டமாவது அரசாங்க உத்தரவாவது வரும் என்று நான் எதிர்பார்த்துக் கொண்டி ருந்தேன். அதிலும் எனக்கு ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு லட்சம் ஏக்கருக்கு மேற்பட்ட நிலங்கள் உள்ள அந்த இடங்களில், ஏற்கெனவே 100—150 வருஷங்களாக அங்கீகரிக்கப்பட்டு வந்த குளங்கோர்வை விவசாயம் இப்போது ஆட்சேபிக்கப்படுகிறது. உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று கோஷித்துக் கொண்டிருக்கும் இந்த நாளில் இந்தப் பிரச்னை குறித்து அரசாங்கம் மௌனம் சாதிப்பதானது, அந்தப் பகுதி மக்களைப் புறக்கணிக்கும் மனப்பான்மையைத் தான் எடுத்துக்காட்டுகிறது என்று நான் சொல்ல வேண்டியிருக்கிறது. சென்ற வருஷம் அந்தப் பகுதியில் இவ்வாறு விவசாயம் செய்தவர்கள் தண்டத் தீர்வை கொடுத்தார்கள். இந்த வருஷம் பஞ்சம் வந்ததால் அவர்களால் அதுவும் கொடுக்க முடியவில்லை. தண்டத் தீர்வை கொடுக்காதவர்களை நிலத்தை விட்டு வெளியேற்றுவதற்கு கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின் றன. இந்தப் பிரச்னை குறித்து கவர்னர் அவர்களுடைய உரையில் எதுவும் சொல்லப்படவில்லை. "இந்தப் பிரச்னையை நாங்கள் கவனிக்க முடியாது" என்று சர்க்கார் சொல்லிவிட்டால், நான் இதைப்பற்றி இங்கே திரும்பத் திரும்பப் பேச வேண்டியதில்லை. சர்க்கார் அவ்வாறு சொல்லிவிட்டால், அந்தப் பகுதி மக்களிடம் நாங்கள் "இதை கவனிக்க சர்க்கார் மறுக்கிறார் கள். ஆகவே நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று சொல்லி, பிரச்னையை அவர்கள் கையில் விட்டு விடுவோம். சர்க்கார் இந்த விஷ யத்தில் மௌனம் சாதிக்கிறது. எங்கள் தொகுதி ஜனங்களிடத் தில் நாங்கள் "அடுத்த சட்டசபைக் கூட்டத்தில் இதைப்பற்றி எடுத்துக் கூறுகிறோம். நமக்கு அனுகூலம் ஏற்படும்" என்று அடிக்கடி சொல்லி வருகிறோம். அவர்களிடம் நாங்கள் "சர்க்காரிடம் எடுத்துக்கூறுகிறோம், எங்களால் ஆனதைச் செய்கிறோம்" என்று சொல்லிவருகிறோம். "பார்ப் போம்", "செய்வோம்" என்றெல்லாம் சொல்லி சர்க்கார் பல பிரச்னை களில் எங்களை ஏமாற்றுவதைப் போல், நாங்களும் எங்கள் தொகுதி ஜனங்களிடம் அதே மாதிரியான வார்த்தைகளைச் சொல்லி அவர்களை ஏமாற்ற வேண்டியிருக்கிறது. இந்தக் குளங்கோர்வை விவசாயப் பிரச்னை வயிற்றுப் பிரச்னை. இது சாப்பாட்டுப் பிரச்னை. இந்தப் பிரச்னையில் அர சாங்கம் மௌனம் சாதிக்கிறது. அது நல்லதல்ல. ராமநாதபுரம் பகுதி மக்களின் எந்தப் பிரச்னையையும் இந்த அரசாங்கம் கவனிக்கவில்லை. அந்தப் பகுதி மக்களுக்கு நன்மை எதுவும் செய்யக்கூடாது என்று இந்த அரசாங்கம் நினைக்கிறதுபோல் இருக்கிறது. அந்தப் பகுதி மக்கள் முன் னேறுவதற்கு உரிய எதுவும் செய்யப்படவில்லை என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri A. P. C VEERABAHU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் ஆற்றிய உரைக்கு நன்றி கூறும் முகத்தான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். கவர்னர் அவர்களுடைய உரையில், நெல்லை, ராமநாதபுரம், மதுரை பகுதிகளில் மழையின்மையால் ஏற்பட்டுள்ள கஷ்டங்களுக்கு நிவாரணமளிக்கும் காரி யங்கள் செய்யப்படும் என்று மேலெழுந்தவாரியாகக் குறிப்பிடப்பட்டிருக் கிறது. நெல்லைப் பகுதியைப் பொறுத்த வரையில், தாம்பரபரணி நதி தீரத்திலுள்ள இடங்களைத் தவிர மற்ற இடங்களில்—சுமார் 7 தாலூகாக் களில்—நஞ்சையோ, புஞ்சையோ. எந்தவிதமான விவசாயமும் நடக்க வில்லை என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். தாம்பரபரணிப் பகுதியிலும் கூட, நஞ்சைப் பயிர்கள் தான், நல்ல விதமாக காலாகாலத்தில் தண்ணீர் விடுகிற

காரணத்தால் ஓரளவு காப்பாற்றப்படுகின்றன. ஆனால், அங்கே இனி, வருகிற கார் விவசாயம் எந்த விதமாக இருக்குமோ என்ற பயம் இருக்கிறது. அதிலும், கனம் மின்சார அமைச்சர் அவர்கள் பாபநாசத்தில் தண்ணீரை தாராளமாகக் கொடுத்தால் தான் சுமார் 20,000 அல்லது 30,000 ஏக்கர் கார் விவசாயம் செய்ய முடியும். எனவே அங்கே தாராளமாகத் தண்ணீர் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரை இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்கிறேன். பாபநாசம் நீர்த்தேக்கத் தண்ணீரும் மணிமுத்தாறு நீர்த் தேக்கத் தண்ணீரும் நல்ல விதமாக உபயோகிக்கப்பட்டால்தான் சில பகுதிகளாவது காப்பற்றப்படும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

விலைவாசிகள் ஏறியிருப்பதால் விவசாயிகளை ஊக்குவிக்க வேண்டு மென்றும் விவசாய உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமென்றும் கவர்னர் அவர்களுடைய உரையில் கொள்கையளவில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதை நான் சந்தோஷத்துடன் வரவேற்கிறேன். இந்த நோக்கங்களை ஈடேற்ற வேண்டுமென்றால், முதலில், இருக்கிற விவசாயிகளுக்கு எல்லா சௌகரியங்களும் செய்துகொடுக்கவேண்டும். திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கும் ஒரே பாசன வசதி, ஜீவ நதி தாம்பரபரணிதான். அந்த நதியால் ஏற்கனவே லட்சத்தி இருபதினாயிரம் ஏக்கர் பாசன வசதி பெற்றிருக்கின்றன. அங்கே இரு போக நஞ்சையும் சரியாக விளைய வேண்டுமானால், பாசன வசதி பெற்றுள்ள நிலங்கள் எல்லாவற்றையும் நன்றாக ஆராய்வதுடன், அவைகளுக்குக் கொடுக்கக்கூடிய தண்ணீர் வசதிகளை எவ் வாறு பெருக்க முடியும் என்றும், அந்தப் பகுதிகளிலுள்ள நிலங் களுக்குள்ள தண்டத் தீர்வைகளை எவ்வளவு குறைக்க முடியும் என்றும், இவைகளைச் செய்வதற்கு சட்டதிட்டங்களை எவ்வாறு மாற்றலாம் என்றும் ஆராய்ந்துபார்த்து, அந்தக் காரியங்களையெல்லாம் சர்க்கார் செய்ய வேண்டும்.

ஆகவே அவைகளைச் செய்வதற்கு தனியாக ஒரு special section ஏற்படுத்தி அதை இந்த பஞ்சநேரத்தில் செய்துகொடுப்பதால் நிரந்தர மாக பாசனவசதி பெற்ற இடங்களுக்கு நல்லபடியானதொரு ஏற்பாடாக அமையும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பருவ மழை தவறிய காரணத்தினால் வரி வஜா போன்ற சலுகைகளை அதிகமாக செய்து கொடுக்க வேண்டும். ஜில்லாக் கலெக்டர், ஏதோ பஞ்சக் குரலை அதிக மாகப் போடுவதால் சலுகைகள் பெற முடியாது, ஜனங்களிடம் பீதியை ஏற்படுத்தக்கூடிய முறையில் பேச வேண்டாமென்றும் டெவலப்மெண்ட் கௌன்ஸில் கூட்டத்தில் சொன்னார்கள். உண்மையிலேயே மக்களிடையே பீதியை ஏற்படுத்த வேண்டும். மக்களிடையே ஒரு பெரிய "அஜிட் டேஷன்" ஏற்படுத்தவேண்டுமென்ற எண்ணம் யாருக்கும் கிடையாது, அதிலும் குறிப்பாக மக்கள் பிரதிநிதிகள் அப்படி செய்யவே மாட்டார்கள். ஆனால் உண்மை நிலைமை சர்க்காரிடம் அழுத்தந்திருத்தமாக, திரும்பத் திரும்ப எவ்வளவு தூரம் சொல்ல முடியுமோ அவ்வளவு தூரம் சொல்ல வேண்டியது மக்கள் பிரதிநிதிகளின் கடமையாகும். எங்கள் ஜில்லா இதுவரை இல்லாத நிலையில் இப்பொழுது பாதிக்கப்பட்டிருக்கிறது. அங் குள்ள பஞ்ச நிலைமையைப்பற்றி இப்பொழுது பூர்ணமாக தெரியவில்லை. ஆனால் இன்னும் ஓரிரண்டு மாதங்கள் கழிந்தால் அதைப் பற்றி பூர்ணமாக தெரியும் ஒரு நிலைமை ஏற்படும். பருத்தி விளைச்சல் சரியாக கோவில்பட்டி, சங்கரன்கோவில் தாலூகாக்களில் ஏற்படவில்லை என்று சொன்னால் அங்குள்ள மக்கள் எப்படி வாழ்வது? தமிழ் நாட்டில் பெரியதொரு பஞ்சநிலை. இதுவரைக் கண்டிராத அளவு. இன்னும் இரண்டு மாதங்களில் திருநெல்வேலி பகுதியில் ஏற்படவிருக்கிறது என் பதை நான் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன். ஆகவே, வரி வஜா, கடன் வசூல் செய்வது போன்றவைகளை நிறுத்திவைப்பது போன்ற நடவடிக்கை களை கலெக்டரின் ரிப்போர்ட் வந்த பிறகு எடுத்துக்கொள்ளலாம் என்ற

12-50 p.m.

நிலைமை இல்லாமல், மக்கள் பிரதிநிதிகள் அதுபற்றி இங்கு அறிவிக்கும் போது அது பற்றிய நிலைமை என்னவென்று ஒரு ரிப்போர்ட் கேட்கும் படியான நிலையில் செயல்பட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நிலப்பிரச்னையைப் பொறுத்தமட்டில், சீக்கிரமாகவே உச்ச வரம்பு கட்டப் படும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன்னோடியாக, இனும்

[5th February 1959 [Sri A. P. C. Veerabahu]

கிராமங்களைப் பற்றி யாரும் குறிப்பிடவில்லை. இம்மாகாணத்தில் 2,000 3,000 இனும் கிராமங்கள் இருக்கின்றன. அங்கு மேல் வாரம், குடிவாரம் யார் யாருக்கு என்று நிர்ணயிப்பதில் கஷ்டமிருந்து கொண்டிருக்கிறது. மேல் வாரம், குடிவாரம் இவைகள் இனும்தாருக்குத்தான் சொந்தம். ஆகவே, அவர்களுக்கு எந்தவிதத்தில் நஷ்டயீடு கொடுப்பது, எவ்வளவு காலத்திற்குள் கொடுப்பது என்பதுபற்றி முடிவு எடுக்கப்படாமல் அது பத்து வருடங்களாக ஒத்திப் போடப்பட்டு வருகிறது. அவ்விதம், 3,000 கிராமங்களில் உள்ளவர்களைப் பற்றி எண்ணிப் பார்க்காமல் நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுகிறோம் என்று சொல்வதில் சந்தேகம் எழத்தான் எழும். ஆகவே, இந்த இனும் கிராமங்களில் மேல் வாரம், குடிவாரம் இவைகளை எப்படி நிர்ணயிக்க வேண்டுமென்று சொன்னால் 1936-ம் வருடச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டு பத்து இருபது வருடமாக, தீர்வை வசூல் செய்யக் கூடிய முறையில், நஷ்ட ஈடு கொடுத்து சர்க்காருக்கு நஷ்டம் வராத முறையில் இனும் அபாலிஷனைக் கொண்டுவர வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுதுள்ள விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க சர்க்கார் ஒரு உணவுக் கொள்கையை பின்பற்றுகிறார்கள். இரண்டு லட்சம் டன் உணவுப் பொருளை குறைந்த விலையில் வாங்கி கூட்டுறவு சங்கங்கள் மூலம் விநியோகம் செய்வதின் மூலம் விலைவாசியைக் கட்டுப்படுத்தலாம் என்ற ஆரம்ப நடவடிக்கையை ஏற்கெனவே எடுத்திருக்கிறார்கள். ஜனவரி 31-ம் தேதி இட்ட சர்க்கார் உத்தரவு பிரகாரம் அது இப்பொழுதே அமுலாக்கப் பட்டு வருகிறது என்று நாம் எடுத்துக் கொள்ளலாம். உண்மையிலேயே இந்த தமிழகத்தில் 10 லட்சம் டன் உபரியாக இருப்பதை, கிராமப் பகுதிகள் நீங்கலாக, மற்ற பிரதேசங்களில் விநியோகம் செய்ய வேண்டிய "க்வாண்டிட்டி" என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதில் இரண்டு லட்சம் டன்தான் நிர்ணயிக்கக் கூடிய விலையில், அதாவது சர்க்கார் நிர்ணயிக்கும் விலைக்கு வாங்குவது என்ற கொள்கை கையாளப் பட்டிருக்கிறது. இது எவ்வளவுதூரம் வெற்றி பெறும் என்று இப்பொழுது சொல்ல முடியாவிட்டாலும் கூட அதிலுள்ள குறைபாடுகளை நான் இப்பொழுதே எடுத்துக் காட்ட முடியும். இரண்டு லட்சம் டன்னுக்கு விலைக் கட்டுப்பாடு அமுலாகிறது. இரண்டு லட்சம் டன்னுக்கு விலைக் கட்டுப்பாடு, "ப்ரொக்யுவர்மெண்ட்" அமுலாகிறது. பாக்கி எட்டு லட்சம் டன்னை இந்தக் கட்டுப்பாடு விலைக்கு விவசாயிகள், மில்காரர்கள் எவ்வளவு தூரம் கொடுக்க முன்வருவார்கள், அவர்கள் தக்க காலத்தில் கொடுப்பார்களா என்று பார்த்துத்தான் இதை நிர்ணயிக்க முடியும். அறுவடை காலத்தில் வாங்கப்பட்டால்தான், "லீன் மன்த்ஸ்"-ல் குறிப்பிட்ட விலைக்கு கொடுக்க முடியும். ஆனால் 12 மாதமாக "spreadover" ஆக கிடைக்காவிட்டால் சர்க்கார் விலையைவிட கூடுதல் விலைக்குத்தான் கிடைக்கும் என்று இருந்தால் இப்பொழுது நாம் காண்கிற பரிகாரம் போதுமா? ஆகவே ப்ரைஸ் கண்ட்ரோல் மூலம் ஒருவாறு சரிக்கட்டி விடலாம் என்று நினைக்கிறேன். நேரடியாக பத்து லட்சம் டன்னையும் சர்க்காரே வாங்கி விலை நிர்ணயம் செய்தால் மீண்டும் ரேஷன் முறை வரலாம். ஆகவேதான் இந்த தயக்கமான நிலையை கையாளவேண்டி வந்திருக்கிறது. ஆகவே விலைவாசிக் கட்டுப்பாட்டை அமுலாக்க வேண்டுமானால் சட்ட ரீதியான நடவடிக்கைகளை கையாண்டால்தான் விலையைக் கட்டுப்படுத்த முடியும். தஞ்சாவூரில் உள்ள மில்கள் கொள் முதல் செய்வதையே நிறுத்திவிட்டார்கள். மேற்குறிப்பிட்ட அறிக்கை வந்தவுடன் அவர்கள் கொள்முதல் செய்வதை நிறுத்திவிட்டார்கள். அப்படியிருக்கும்போது அந்த மில்களுக்குப் போய் எப்படி இரண்டு லட்சம் டன் கொள்முதல் செய்முடியும் என்ற பிரச்னை எழுகிறது. பின்னர், 10 மாண்ட் விற்கிற வரையில் கண்ட்ரோல் கிடையாது என்று சொல்லப்படுகிறது. பத்து மாண்ட்வரை "ரீட்டேல் ஸேல்ஸ்"-க்கு ப்ரைஸ் கண்ட்ரோல் இல்லை என்றிருக்கிறது. ஆகவே தனிப்பட்ட வியாபாரிகள் நாலைந்தாக பில்களைக் கிழித்து பத்து பத்து மாண்ட்களாக விற்றுவிடுகிறார்கள். அவ்விதம் பத்து மாண்ட்களாகவும், அதற்குக் குறைத்தும் விற்றுவிடுகிறார்கள் மொத்த வியாபாரிகள். அதனால் அவர்களுக்கு கிடைக்கக் கூடிய லாபத்தில் குறைவேயில்லை. பத்து மாண்டுக்கு குறைவாக விற்பதற்கு கண்ட்ரோல் இல்லையாதலால் மொத்த வியாபாரிகள் இப்படி பத்து பத்து மாண்ட்களாக விற்று லாபம் ஈட்ட வாய்ப்பளிக்கிறது. ஆகவே,

[Sri A. P. C. Veerabahu] [5th February 1959

இந்த பத்து மாண்ட்டிற்கு குறைவாக விற்பதற்கு இந்த ப்ரைஸ் கண்ட்ரோலில் இருந்து விதிவிலக்கு கொடுக்காமல் அதையும் கண்ட்ரோல் செய்வதின் மூலம்தான் இப்பொழுது மொத்த வியாபாரிகள் இதைத் தங்களுக்கு சாதகமாக வைத்துக்கொள்வதைத் தடை செய்ய முடியும். இன்னும் ஓரிரு வாரங்களில், மழையின்மையால் கஷ்டப்படும் கிராமங்களில் மக்கள் நினைக்கும் விலைக்கு உணவு தான்யங்கள் வாங்க முடியாமல் போகப் போகிறது. ஆகவே அதைத் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் உடனே கைக்கொள்ளவேண்டும். அதோடுகூட, நாம் மாத்திரம் விலைவாசியை கட்டுப்படுத்துகிறோமே தவிர கேரள சர்க்கார் அதன் உச்ச விலையை நிர்ணயிக்கவில்லை. ஆகவே ரீட்டேல் ப்ரைஸை கண்ட்ரோல் செய்வதின் மூலம்தான் ப்ரைஸ் கண்ட்ரோலை அமுலாக்க முடியும். இச்சந்தர்ப்பத்தில் நான் வேறு ஒன்று சொல்ல விரும்புகிறேன். கம்பு, சோளம் போன்றவைகளுக்கு இன்னும் கண்ட்ரோல் ஏற்படவில்லை. ஆனால் மத்திய அரசாங்கம் இதையும் கண்ட்ரோல் விலைக்கு கொண்டுவர வேண்டுமென்று அறிவித்திருக்கிறார்கள். நம் மாகாணத்தைப் பொறுத்த மட்டில், ஏற்கனவே பருவமழை தவறியிருப்பதின் காரணமாகவும், கம்பு, சோளம் இவைகளை "ப்ரொக்யுவர்மெண்ட் ஆர்டர்" டின் கீழ் கொண்டு வரக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

1 p.m.

மின்சாரம் சம்பந்தமாக ஒன்றிரண்டு வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். மின்சார அமைச்சர் பெருமைப்பட்டுக்கொள்ளக்கூடிய அளவுக்கு மின்சார வசதி 8,000 கிராமங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று காட்டப்பட்டிருக்கிறது. ஆனால் இன்னும் பல கிராமங்கள் ஏமாற்றமடைந்த நிலையில்தான் இருந்துகொண்டிருக்கின்றன. லைஸன்ஸ் கம்பெனி நடத்துகின்ற இடங்களில் ஒருவிதமான முன்னேற்றமும் இல்லாமல் அப்படியே இருந்து கொண்டிருக்கின்றன. இதைப்பற்றி பல சந்தர்ப்பங்களிலும் இங்கு குறிப்பிட்டிருக்கிறேன். வேறு பல பகுதிகளில் மின்சார வசதி அபிவிருத்தி அடைந்திருந்தாலும்கூட லைஸன்ஸ் கம்பெனி நடத்துகின்ற பிராந்தியங்களில் ஒருவிதமான முன்னேற்றமும் இல்லாமல்தான் இருந்துகொண்டிருக்கின்றன. அந்த பிராந்தியங்கள் ப்ளாக் டெவலப்மெண்ட் ஏரியாவாக இருந்தாலும்கூட அந்த இடங்கள் எல்லாம் மின்சார வசதி பெறாமல்தான் இருந்துகொண்டிருக்கின்றன. லைஸன்ஸ் கம்பெனிகள் அவர்களுடைய சுதந்திரமான பிராந்தியங்கள் என்ற முறையில் உரிமை கொண்டாடுகின்றது. இந்த பிராந்தியங்களை எல்லாம் ஏன் சட்ட ரீதியாக எடுத்து அரசாங்கத்தின் கீழ் கொண்டுவரக்கூடாது என்பது தான் தெரியவில்லை. இதற்கு ஏன் அரசாங்கத்தார் தயங்குகின்றார்கள் என்பதற்குத்தான் எந்த விதமான சமாதானமும் கிடைக்கவில்லை. ஏற்கனவே நமக்கு இரண்டு லட்சம் கிலோவாட்ஸ் கிடைத்துக்கொண்டிருக்கிறது. மேலும் இனி இரண்டு லட்சம் கிலோ வாட்ஸ் கிடைக்கும் என்று தெரிகிறது. இவற்றையெல்லாம் நாம் யாருக்கு சப்ளை செய்யப்போகிறோம் ? ஆகவே இதில் சட்டரீதியாக உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். அதிலும்கூட சட்ட ரீதியாக எடுக்கும்போது பலவிதமான விவாதங்கள் எழலாம். ஆகவே இதற்கு தனியாக ஒரு அவசரச் சட்டத்தை பிறப்பித்து கம்பெனியார்கள் மூலதனம் போடாத இடங்களை எல்லாம் எடுத்து மின்சார அபிவிருத்தி செய்து கொடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கூறிக்கொள்ளுகிறேன். இப்போது எப்படியிருக்கிறது என்றால் " தானும் செய்யமாட்டேன், பிறரையும் செய்ய விடமாட்டேன் " என்ற முறையில் " நந்தி " போன்று இருந்து கொண்டிருக்கிறார்கள் இந்த லைஸன்ஸ் கம்பெனியார். ஆகவே ஒரு அவசரச் சட்டம் கொண்டுவந்தாவது இதை மாற்றி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இங்கு பரம்பிக்குளம், பம்பையாறு, சீரியாறு முதலிய திட்டங்களைப்பற்றி பேசினார்கள். இதை ஏன் மீண்டும் சொல்ல வேண்டும் என்று சர்க்கார் நினைக்கலாம். மீண்டும் மீண்டும் சொல்லுவது என்பது சர்க்காருக்கு ஆதரவு கொடுப்பதற்காகத்தான் சொல்லப்படுகிறதே தவிர வேறு ஒன்றுமில்லை. இதைப்பற்றி செட்டிநாடு ராஜா அவர்கள் குறிப்பிடும்பொழுது. . . .

5th February 1959]

SRI K. VINAYAKAM : ராஜா என்று இப்போது யார் இருக்கிறார்கள் ?

* SRI A. P. C. VEERABAHU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, செட்டிநாடு ராஜா என்ற முத்தையா செட்டியார் அவர்கள் குறிப்பிட்டார்கள். இப்பொழுது ஜனத்தொகையின் அடிப்படையில் நம்முடைய மாகாணத்திற்கு கிடைக்கவேண்டிய சலுகை மத்திய அரசாங்கத்தினிடமிருந்து கிடைக்கிறது என்றும் உத்திரப் பிரதேசம் போன்ற மாகாணங்கள் அவர்களுடைய ஜனத்தொகைக்கு ஏற்ப சலுகையை பெற்றிருக்கிறார்கள். ஆனால் ஒரு காரியத்தைமட்டும் நாம் கவனித்துப் பார்க்க வேண்டும். மற்ற மாகாணங்களில் இருக்கும் நீர் தேக்கங்களை அவர்கள் எந்த அளவுக்கு உபயோகப்படுத்துகிறார்கள் என்பதை நாம் பார்க்க வேண்டும். பக்ராநங்கலை எடுத்துக்கொண்டாலும்கூட அதன் மூலம் பூரா நீரையும் உபயோகப்படுத்திக்கொள்ளவில்லை. பத்து அல்லது பதினைந்து சதமானம்தான் அவர்கள் நீர் தேக்கங்களை உபயோகப்படுத்துகிறார்கள். நாம் அப்படியல்ல, பூரா அளவையும் உபயோகப்படுத்துகிறோம். மற்றவர்கள் இருக்கின்ற நீர்வளங்களை காட்டி அதற்கு தகுந்தபடி மத்திய சர்க்காரிடத்திலிருந்து சலுகையைப் பெற்றுக்கொள்கிறார்கள். ஆனால் நீர் தேக்கங்களின் மூலம் ஏற்பட்டிருக்கின்ற சாதனைகளைக் காட்டி நாம் மத்திய சர்க்காரிடமிருந்து சலுகையைப் பெறவேண்டும். இதை நாம் சுட்டிக்காட்ட வேண்டும். நாம் நீர் தேக்கங்களை பூராவும் பூர்ணமாக உபயோகப்படுத்துகிறோம். மற்றவர்கள் அவ்விதம் உபயோகப்படுத்துவதில்லை. ஆகவே இந்த முறையில் பார்க்கும்போது செய்திருக்கின்ற சாதனைகளை எடுத்துக்கொண்டு பார்த்தால் நமக்கு அதிகமான சலுகை செய்ய மத்திய சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறார்கள். அது மட்டுமல்ல, இந்த தேக்கங்களின் மூலமாக நன்மை பெறுகிறவர்களிடமிருந்து ஏதாவது சார்ஜ் வசூல் செய்ய வேண்டுமென்றால் அதையும்கூட கொடுக்க மக்கள் தயாராய் இருக்கிறார்கள். இதல்லாமல் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திற்கோ அல்லது மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்கோ ஒதுக்கியிருக்கும் பணத்திலிருந்து இந்த நீர்த்தேக்கங்களுக்கு ஒதுக்குவது என்பது தவறாகத்தான் முடியும் என்று நான் நினைக்கிறேன். ஆகவே நம்முடைய ஜனத்தொகையை கணக்கிலெடுக்காமல் நாம் செய்திருக்கும் சாதனைகளை கணக்கிலெடுத்து அவைகளை சுட்டிக் காட்டி அதன் மூலம் மத்திய சர்க்காரிடமிருந்து அதிகமான சலுகைகளைப் பெற்று நமது தமிழ் நாட்டில் பெரிய நீர்த்தேக்கங்களை அமல் நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI A. V. P. ASAITHAMBI : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, நேற்றைய தினம் மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் உரையாற்றியபோது இந்த மன்றத்திற்கு வராதபடி, வெளியிலிருந்த திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் இன்றையதினம் முதன்முதலாக நான் பேசுகிறேன். நேற்றைய தினம் வராதவர்கள் இன்றைய தினம் ஏன் வந்தார்கள் என்று கவர்னர் அவர்கள் உரையின் மீது முதலாவதாக பேச்சை ஆரம்பித்து வைத்த அம்மையார் ராஜாத்தி அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அதே சமயத்தில் நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் "இவர்கள் வெளியிலிருந்து படித்து தெரிந்து கொண்டு வந்திருப்பார்கள்" என்று குறிப்பிட்டார்கள். அவர்கள் அந்த மாதிரி குறிப்பிட்டதானது, நேற்று வராதவர்கள் எல்லாம் கவர்னர் உரையை படித்துக்கொண்டு வந்திருப்பார்கள், மற்றபடி இங்கு நேற்றையதினம் வந்திருந்தவர்கள் எல்லாம் படிக்காமல்தான் வந்திருப்பார்கள் என்றுதான் பொருள் என்று நான் நினைக்காவிட்டாலும்கூட, இம்மாதிரி பொருள் எழுகின்ற காரணத்தால் அந்த வார்த்தையை அவர் சொல்லாமல் இருந்திருக்கலாம், அவர் அவ்விதம் சொன்னதற்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். அதுமட்டுமல்ல, கடந்த ஆண்டில் நிதி அமைச்சர் அவர்கள் பல தடவைகளிலும் 'நாங்கள் எதையும் படிக்காமல் பேசுகின்றோம்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் ஓராண்டுக்குப் பிறகாவது படித்துவிட்டுத்தான் நாங்கள் வந்திருக்கிறோம் என்று இப்போதாவது நிதி அமைச்சர் அவர்கள் உணர்ந்திருப்பதைப் பார்த்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இப்போதாவது படித்து தெரிந்து வருபவர்களோடு எங்களைச் சேர்த்துக்கொண்டதற்காக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் உரை ஆற்றுகிற

[Sri A. V. P. Asaithambi] [5th February 1959

பொழுது எங்களுடைய கட்சி ஏன் கலந்துகொள்ளவில்லை என்பதைப்பற்றி பன்முறை இதே மன்றத்தில் விளக்கிக் கூறியிருக்கிறோம். கவர்னர் என்கிற பதவி, ஆங்கிலேயர்கள் நம்முடைய நாட்டை ஆண்டுகொண்டிருந்த காலத்தில் அவர்களுடைய ஏஜெண்டாக ஏற்படுத்தப்பட்ட ஒரு அவமானச் சின்னமாகும். அதே மாதிரிதான் இன்றைய தினம் நம்மை ஆண்டு கொண்டிருக்கிற வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டாக நம்முடைய நாட்டில் இருப்பதுதான் கவர்னர் என்கிற பதவி என்று நாங்கள் திட்டவட்டமாக கருதுகிற காரணத்தால் அவர் உரையாற்றுகிறபொழுது நாங்கள் இல்லாமல் இருந்து விட்டு பின்னால் கலந்துகொள்வது என்கின்ற கொள்கையை நாங்கள் கடைப்பிடித்தோம். ஆனால் தோழியர் ராஜாத்தி அவர்கள் பேசுகிறபொழுது "இப்போது வராமல் இருந்துவிட்டால் என்ன" என்றும் கேட்டார்கள். நாங்கள் நினைத்தால் கவர்னர் அவர்கள் உரையாற்றுகிற நேரத்தில் இந்த மன்றத்திலேயே உட்கார்ந்து இருந்துகொண்டு எங்களுடைய அதிருப்தியைக் காட்டி இருக்கமுடியும். பல மாகாணங்களில் இவ்விதம் சட்டமன்ற உறுப்பினர்கள் தங்களுடைய அதிருப்தியைக் காட்டி வருவதைப்பற்றி அன்றாட பத்திரிகைகளில் நாம் பார்க்கிறோம். பம்பாய் மாகாணத்தில் சட்டமன்ற உறுப்பினர்கள் தங்களுடைய சம்யுக்த்த மகா ராஷ்டிரம் வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்துவதற்காக கவர்னர் உரையாற்றுகிறபொழுது இடையில் எழுந்து வெளியில் வந்து தங்களுடைய அதிருப்தியை வெளிக்காட்டியிருக்கிறார்கள். அதே மாதிரியான முறையில் இங்கும் கவர்னர் உரையாற்றுகிறபொழுது, 'நீங்கள் வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டாக இருக்கிறீர்கள், உங்களுடைய உரையைக் கேட்க நாங்கள் தயாராக இல்லை' என்று சொல்லிவிட்டு எங்களால் வெளியில் போயிருக்கமுடியும். ஆனால் நாங்கள் அவ்விதம் போகவில்லை. காரணம், கவர்னர் அவர்கள் சென்ற ஆண்டிலும் இந்த ஆண்டிலும் குறிப்பிட்டிருக்கிறது மாதிரி இந்த மன்றத்தின் புகழ், பெருமை, பண்பு இவைகள் எல்லாம் வளர்ந்தோங்கியிருக்கின்ற காரணத்தால்தான் நாங்கள் அவ்விதம் நடந்துகொள்ளவில்லை. அதிலும் குறிப்பாக எதிர்கட்சியில் இருக்கும் எங்களுக்கு, இந்த மன்றத்தில் புகழும், பண்பும், பெருமையும் வளர்ந்திருக்கிறது என்று சொன்னால் நாங்கள் அதற்கு மிகவும் பொறுப்புள்ளவர்களாவோம். இதை கவர்னர் அவர்களே உணர்ந்திருக்கிறார்கள். மற்றபடி எங்களால் மற்ற மாகாணங்களில் செய்வதைப்போன்று செய்ய முடியாது என்று யாரும் கருத வேண்டாம், அவ்விதம் செய்யவேண்டுமென் மென்று யாரும் நினைக்கவும் வேண்டாம் என்று இந்த மன்றத்திலுள்ள அங்கத்தினர்களுக்கு உங்கள் மூலம் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் கவர்னர் பதவி வேண்டாம் என்று நாங்கள் சொல்லுவதற்குக் காரணம் கவர்னர் என்கிற பதவி வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டாக நமது நாட்டில் இருக்கிற பதவி மட்டுமல்ல, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் இருக்கின்ற இந்த மன்றத்தில், ஜனநாயகத்திற்கு ஒவ்வாத முறையில் கவர்னர் தலைவராக இருப்பது ஜனநாயகமாகாது என்று நாங்கள் கருதுகின்ற காரணத்தினாலும் நாங்கள் கவர்னர் என்கின்ற பதவியை எதிர்க்கிறோம்.

1-10 p.m.

அது மாத்திரமல்ல. கவர்னர் என்ற பெயராலே வருஷந்தோரும் லட்சக்கணக்கான பணத்தைச் செலவு செய்கிற காரணத்தினால் அந்தப் பதவியை எதிர்த்து, அத்தகைய பதவியில் அமர்ந்திருக்கிறவர்கள் உரையாற்ற வந்தபோது—வட நாட்டின் ஏஜெண்டாக உரையாற்ற வந்தபோது—அந்த உரையில் கலந்து கொள்ளாது, நாகரீகமான முறையிலே—ஒற்றுமையை நிலைநாட்டி வந்திருக்கின்ற காரணத்தினால்—ஒதுங்கி இருந்து விட்டு, இன்றைய தினம் கலந்து கொண்டு மேற்கொண்டு பேசுகிறோம். அது மாத்திரமல்ல. கவர்னர் அவர்கள் ஒவ்வொரு வரியிலும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.—"விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை, சகிப்புத் தன்மை முதலிய இனிய பண்புகள்தான் குடி ஆட்சியின் வெற்றிக்கு மிகவும் இன்றியமையாதவை. இந்நல்லபோக்கு நீடித்து நிலவுமென்று நம்புகிறேன். அதுவே என் பிரார்த்தனை" என்று கவர்னர் முதல் பக்கத்திலேயே குறிப்பிட்டிருக்கிறார்கள். அதே மாதிரியான முறையைத்தான் திராவிட முன்னேற்றக் கழகம் கடைபிடித்தது—இன்றைக்கு மாத்திரமல்ல, பல வருஷங்களாகக் கடைபிடித்து வருகின்றது. "கவர்னர் தலைமையில் ஆட்சி

5th February 1959] [Sri A. V. P. Asaithambi]

இருக்கும்போது நீங்கள் இந்த மன்றத்தில் இருக்கக்கூடாது" என்று யாராவது கேட்பார்கள் என்று சொன்னால், உங்கள் சரித்திரத்தை நீங்கள் திருப்பிப் பார்க்கவேண்டும். "வெள்ளையனே வெளியேறு" என்று சொன்னது போய், வெள்ளைய நாட்டுக்குத் தலைவியான எலிஸபெத் ராணியின் கணவன் எடின்பரோ கோமகனுக்கு, இது வரைக்கும் யாருக்கும் தராத ஒரு வரவேற்பை இன்றைக்குக் கொடுத்தீர்கள். வெள்ளைய நாட்டு ராணி, எலிஸபெத்தின் பட்டாபிஷேகத்திற்கு பண்டித நேரு போனார்—போய் மாம்பழம் பரிசளித்தார். ஆனால், இந்த மாதிரி நிலையில் நாங்கள் இல்லை. "வெள்ளையனே ஆகாது, வெள்ளையன் வெளியேறினால்தான் சுபிட்சத் தன்மையாக இருக்க முடியும்" என்று கூறிய நீங்களே, 1937–38–ல் இதே மன்றத்தில்—ராஜகோபாலாச்சாரி மந்திரி சபை அமைத்து—பாராண்டீர்கள். அதே மாதிரி முறையை எடுத்துக் கொண்டு பார்த்தாலும், நீங்கள் வெள்ளையனை வெளியேற வேண்டுமென்று சொல்லிவிட்டு, வெள்ளையன் கீழே ஆட்சி நடத்திய மாதிரி, வட நாட்டு ஏகாதிபத்திய ஆட்சி இங்கே ஒழிந்து விடுதலை பெற வேண்டுமென்று சொல்லுகிற திராவிட முன்னேற்றக் கழகம், அதற்கான முயற்சிகளைச் செய்வதற்காகத்தான் இந்த மன்றத்திலே இருக்கிறதே தவிர வேறில்லை. நாங்கள் வெளியில் போகவேண்டுமென்று அம்மையார் விரும்புகிறார்கள். அவர்களுக்கும், அமைச்சர்களுக்கும் நான் சொல்லுகிறேன். இன்றைக்கில்லாவிட்டாலும் நாளைக்கு நாட்டை ஆளப்போகிற கட்சி திராவிட முன்னேற்றக் கழகம் என்பதை மறந்து விட வேண்டாம். அது மாத்திரமல்ல, திராவிட முன்னேற்றக் கழகம், தென்னகத்தைப் பொறுத்த வரையில் வட நாட்டாரால் புறக்கணிக்கப்படுகிறது என்று நாங்கள் சொல்லுவது இருக்கட்டும். காங்கிரஸ் அங்கத்தினர் என்று கருதப்படுகிற செட்டிநாட்டு அரசர் பேச்சிலே கூடக் குறிப்பிட்டார், "டில்லியிலிருந்து நமக்கு அதிகப் பணம் வேண்டும், அதற்கு டில்லிக்குப் போய் மந்திரிகள் சண்டை போடவேண்டும், அதுவும் இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாகின்ற நேரத்தில் வலியுறுத்தவேண்டும்" என்று குறிப்பிட்டுப் பேசினார். இதைத்தான் நாங்கள் இன்றைக்கு அல்ல, பல வருஷங்களாக இந்த நாட்டு மக்களிடத்திலே சொல்லி வருகிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்காக இம்மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்ட 152 கோடி ரூபாய் போதுமானதல்ல, கேட்டது 398 கோடி, கிடைத்தது 152 கோடி, இது மிகக் குறைவான தொகை, இந்த மாதிரிக் குறைவான தொகையில் உருப்படியான திட்டங்கள் செய்யப்பட வில்லை என்று நாங்கள் புள்ளிவிவரங்களோடு பல இடங்களில் வற்புறுத்தி வந்திருக்கிறோம். கவர்னர் உரையிலே குறிப்பிட்டிருக்கின்றதைப் பார்த்தால், நெய்வேலியைப் பற்றி மிகப் பெருமையோடு குறிப்பிட்டிருக்கின்றார். நானும் மகிழ்ச்சியடைகிறேன். நெய்வேலித் திட்டம் ஆரம்பிக்கப்படுவதால் பல நன்மைகள் கிடைக்கப்போவதைப் பற்றி நாங்கள் மகிழ்ச்சியடைகின்றோம். ஆனால், இந்தத் திட்டம் யாருக்குச் சொந்தம் என்று பார்க்கும்போதுதான் கவலை மேலிடுகிறது. ஏனென்றால், இதே மன்றத்திலே கனம் வெங்கட்ராமன் அவர்களை நான் ஒரு கேள்வி கேட்கும்போது 'இந்த நெய்வேலித் திட்டத்தில் 25 சத வீதம் நமக்குச் சொந்தம், 75 சத வீதம் மத்திய சர்க்காருக்குச் சொந்தம்' என்று சொன்னார்கள். நெய்வேலித்திட்டம் ஐந்தாண்டுத் திட்டங்களின்கீழ் உருவான ஒரு திட்டம். இதிலே நமக்குச் சொந்தமானது 25 சத வீதம், அவர்களுக்குச் சொந்தமானது, 75 சத வீதம். ஆனால்' பஞ்சாபில் இருக்கின்றதே பக்ரா நங்கல் திட்டம்" அதுவும் அஸ்ஸாமில் இருக்கிற எண்ணெய்க் கிணறுகள், அத்தனையும் அந்த மாநிலங்களுக்கே சொந்தமாகி அப்படிச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. பக்ரா நங்கல் பஞ்சாபிற்கு சொந்தமாகும்போது எண்ணெய்க்கிணறுகள் அஸ்ஸாமிற்குச் சொந்தமாகும்போது, நம் மாநிலத்திலுள்ள நெய்வேலித் திட்டம் ஏன் நம் மாநிலத்திற்குச் சொந்தமாகக் கூடாது என்று இங்கு இருக்கும் அங்கத்தினர்கள் எண்ணிப் பார்த்து வட நாட்டு சர்க்காருக்கு எடுத்துச் சொல்லவேண்டும். அது மாத்திரமல்ல. நமது மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் முன்னாள் அஸ்ஸாம் முதலமைச்சராக இருந்திருக்கிறார். அவர் இருந்த போதுதான், அஸ்ஸாம் எண்ணெய்க் கிணறுகளில் மத்திய சர்க்காருக்குப் பங்கு இருக்கக் கூடாது, அஸ்ஸாமிற்கே இருக்கவேண்டும் என்று அந்த நிலை ஏற்பட்ட பிறகுதான் இங்கே கவர்னராக வந்திருக்கிறார்கள். அவரை மனதில் வைத்து

[Sri A. V. P. Asaithambi] [5th February 1959

கொண்டு பார்த்தாகிலும் ஏன் வடக்கே போய் சண்டை போடக்கூடாது ? ஏன் நெய்வேலி நமக்காக்கக் கூடாது ? பக்ரா நங்கல் பஞ்சாபிற்குச் சொந்த மாகும்போது, நெய்வேலி ஏன் நமக்குச் சொந்தமாகக் கூடாது? எண்ணெய்க் கிணறுகள் அஸ்ஸாமிற்குச் சொந்தமாகும்போது, நெய்வேலி ஏன் நமக்குச் சொந்தமாகக் கூடாது ? நாம் அனைவரும் எண்ணிப் பார்க்கவேண்டும் என்று சொன்னால், இதில் கட்சி பேதம் வரவேண்டியதில்லை, ஒரே மனப் பான்மையோடு வற்புறுத்த முடியும். இந்த மாதிரிக் காரியத்தைச் செய்ய வேண்டுமென்று திராவிட முன்னேற்றக் கழகம் சொல்லுகிறதே தவிர, வேறு எந்தக் காரணத்திற்காகவும் கூறுவதாக யாரும் கருதவேண்டாம். ஏனென்றால், கவர்னர் உரையிலே இன்னொன்றையும் குறிப்பிட்டிருக்கிறார். அதாவது "சட்ட மன்றத்தின் உள்ளும் புறமும் கருத்து வேறுபாடுகள் நிறைந்த பல விஷயங்களிலும் உடன்பாடு காண முடிந்தது" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். உள்ளபடியே கவர்னர் அவர்கள் தெரிந்தோ, தெரியாமலோ இதைச் சேர்த்திருக்கிறார்கள். ஏனென்றால் இம்மாதிரி உடன்பாடு இருந்திருப்பதாகச் சொல்ல முடியாது. தோழியர் ராஜாத்தி ஊட்டியைப் பற்றிச் சொன்னார்கள். இந்த விஷயத்தில் ஏற்பட்ட உடன்பாடு என்ன ? ஊட்டியில் உள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் நமது அமைச்சர்களை வற்புறுத்தி ஊட்டியில் மன்றம் நடக்கவேண்டுமென்று கேட்க, அதற்கு அமைச்சர் எல்லாக் கட்சிகளும் சம்மதித்தால் வைத்துக்கொள்ளலாம் என்று சொன்னார்கள். அதைப் பற்றி எங்களிடத்திலே கேட்கப்பட்டது. நாங்கள் வேண்டாமென்று சொன்னோம்—முடியாது என்றே சொன்னோம். "காரணம் என்ன?" என்று கேட்டார்கள். வீண் செலவு; மக்கள் பணத்தை உபயோ கிக்கக் கூடாது." என்று சொன்னோம். ஒரே காரணத்திற்காக முடியாது என்று சொன்னோம். காங்கிரஸ்காரர்கள் சொன்னார்கள் "அவர்கள் வரமாட்டேன் என்று சொல்லுகிறார்களே, இப்பொது என்ன செய்வது" என்று. ஊட்டியிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் எங்களிடத்திலே காவடி வந்தார்கள். "உங்கள் கட்சிக்காகவாவது வரக் கூடாதா?" என்று கேட்டார்கள். "சென்னை மாநிலத்திற்குத் தமிழ் நாடு என்று பெயரை மாற்றி வையுங்கள், அன்றைய மறு நாளே போவோம்" என்று சொன் னோம். அவர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை. முடிவில் எல்லாக் கட்சி களும் சம்மதிக்கவேண்டுமென்பது போய், "வந்து சேருங்கள்" என்று சொன்னால் ஒருமித்த கருத்து இந்த மன்றத்தில் இருக்கிறதா? அதுவும் ஆளும் கட்சிக்கு இருக்கிறதா என்று யாராவது நடு நிலைமையில் இருந்து கொண்டு சொல்ல முடியுமா என்று பார்த்தால், முடியாது. இதி லிருந்து, ஆளும் கட்சிக்கு ஒருமித்த கருத்து கிடையாது, ஒருமித்த கருத்து இருப்பதுபோல சில சமயத்தில் நடிக்கிறார்கள், என்று நன்றாகத் தெரி கிறது. இதைக் காட்டிக் கொடுப்பது போல சில சந்தர்ப்பங்களில் வெளிப் படுகிறது. "ஊட்டிக்குப் போகக் கூடாதா? ஊட்டி திராவிட நாட்டில் இல்லையா? ஊட்டியில் உங்கள் கட்சி இல்லையா? ஏன் வரக் கூடாது?" என்று கேட்கிறார்கள். ஊட்டியை வேண்டாமென்று சொன்னதன் நோக் கம் என்ன? வெள்ளைக்காரர்கள் எதற்காக ஊட்டிக்குப் போனார்கள் என்பதை எண்ணிப் பார்த்தால், ஊட்டியே வேண்டாமென்று வந்துவிடுமே தவிர, விருப்பம் இருக்காது. பொறுப்பற்றவர்கள், இந்த நாட்டின் செலவைப் பற்றி அக்கரையில்லாத வெள்ளைக்காரர்களுக்கு ஏப்ரல் மாதங் களில் வெய்யில் அவர்களுக்கு உள்ளபடியே தாங்க முடியாது. காரணம், ராஜ கோபாலாச்சாரியார் அவர்கள் "க்ரோட்டன்ஸ்" என்று வர்ணித்திருக்கி றார்கள். நாங்கள் அல்ல. க்ரோட்டன்ஸ் வெய்யில் காலத்தில் வாடிப் போய் விடும். ஆகவே குளிர் தேவைப் பட்டது. அதுவும் அப்போது ஏர் கண்டிஷனிங் சாதனம் கிடையாது. ஏர் கண்டிஷனிங் தேவை என்று சொன்னால் ஊட்டிக்குப் போகும் செலவில் பாதிச் செலவில் சுற்றிலும் ஏர் கண்டிஷனிங் செய்து விட முடியும். அதற்கு வசதி இருக்கிறது. அந்த அளவுக்குச் செய்து விட முடியும். "வெள்ளைக்காரன் போனான், நாமும் போகவேண்டும்" என்று புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்ட மாதிரி நாமும் செய்ய வேண்டுமென்று சொல்லு வதில் அர்த்தம் இருக்கிறதா? இதே மன்றத்தில் காலம் சென்ற சத்தியமூர்த்தி எவ்வளவோ தடவை வெள்ளைக்காரர்களைப் பற்றிப் பேசி யிருக்கிறார். அவருடைய வாரிசுகளாகிய இவர்களே சத்தியமூர்த்திக்கு அவமானமான ஒரு பெயரை வாங்கிக்கொடுக்கவேண்டும் என்ற

1·20 p.m.

வகையிலே ஊட்டியிலே போய் உட்கார்ந்து பேசப்போகிறார்கள் என்றால், இதைவிட வெட்கக்கேடு என்ன இருக்கிறதென்று எண்ணிப் பார்க்கவேண்டும். எத்தனை முறை, எவ்வளவு பேர் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்று பழைய ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால் தெரியும். ஊட்டியிலே போய் அங்குள்ள மக்களுக்கு என்ன செய்துவிட முடியும்? ஊட்டியிலே நாம் போய் அந்த மக்களுக்கு என்ன வேலை கிடைக்கும்? அங்கு நாம் போனால், ஓட்டல்களுக்கு வியாபாரம் நடக்கும். அது தவிர, அங்குள்ள மக்களுக்கு என்ன வேலை கிடைக்கப் போகிறது? உண்மையிலேயே இந்த அரசாங்கத்திற்கு ஊட்டியிலே இருக்கும் மக்கள்மீது நல்லெண்ணம் இருக்குமானால், ஊட்டியிலே இருக்கும் மக்களின் வேலை இல்லாதவர்களைக் கணக்கெடுத்து, உருப்படியாக அவர்களுக்கு வேலை கிடைக்கும் திட்டம் வகுத்து நிறைவேற்றினால், மாலை போட்டு வரவேற்போம்.

கச்சா பிலிம் தொழிலை ஊட்டியிலே ஆரம்பிப்பதாக இருந்தது. மாநில சர்க்கார் தைரியமாக இருந்து, மத்திய சர்க்காரோடு சண்டை போட்டால் அடுத்த மாதத்திலேகூட கச்சா பிலிம் தொழிலை அங்கே ஆரம்பிக்கட்டும். வேண்டாம் என்று சொல்ல வில்லை. இதையெல்லாம் விட்டுவிட்டு, ஏதோ ஊட்டிக்குப் போவதை நாங்கள் வேண்டாமென்று சொல்லுகிறோம் என்று வருத்தப்பட, மக்களிடையே தவறான பிரசாரம் செய்கிறார்கள்.

அம்மையார் அவர்கள் சொன்னார்கள், "உல்லாசத்திற்காகவா ஊட்டிக்குப் போகிறோம்?" என்று. நாங்கள் உல்லாசத்தை வேண்டாமென்று சொல்லவில்லை. உல்லாசமே வேண்டாம் என்று உல்லாசத்தை விட்டு தூரமாகப் போகிறவர்கள் அல்ல நாங்கள். உல்லாசம் வேண்டியவர்கள் தான். ஆனால், மக்களுடைய பொதுப் பணத்தைக் கொண்டு அந்த உல்லாசத்தை நாம் அனுபவிக்கவேண்டாமென்பதுதான் எங்கள் கருத்தே தவிர வேறு அல்ல. "ஊட்டியிலே போய் உல்லாசத்தை அனுபவிக்கப் போகவில்லை" என்று அம்மையார் அவர்கள் சொன்னார்கள். நான் ரொம்ப வருந்துகிறேன். ஊட்டிக்குப் போய் உல்லாசத்தை அனுபவிக்காமல் வருகிறதென்றால் அது ரொம்ப வருந்தத்தக்கது. ஊட்டிக்குப் போனால் உல்லாசத்தை அனுபவிக்கத்தான் வேண்டும். நாங்கள் எதனாலோ ஊட்டியை வேண்டுமென்றே வெறுக்கிறோம், எங்களுக்கு ஏதோ கொள்கை இருக்கிறது என்றெல்லாம் சொல்லப்பட்டது. கொள்கை அல்ல, ஒன்றும் அல்ல, மக்களுடைய பணத்தில் போக வேண்டாம். ஊட்டியிலே போய் சட்ட மன்றம் நடப்பதைவிட இந்த மன்றத்திலேயே எத்தனையோ யோசனைகளை பல அங்கத்தினர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஹைகோர்ட்டு சென்னை நகரத்திலே இருப்பதினால் பலர் பல இடங்களிலிருந்து வந்து கஷ்டப் பட வேண்டியிருக்கிறது. ஹைகோர்ட்டை மாவட்டவாரியாக மாதம் ஒரு தடவை சுற்றிக்கொண்டு வாருங்கள், மக்களுக்குச் சுலபமாக இருக்கும், அந்த உருப்படியான காரியத்தைச் செய்யுங்கள் என்று இந்த மன்றத்திலே சொல்லப்பட்டது. அதை விட்டுவிட்டு இங்கே இருக்கும் மன்ற உறுப்பினர்கள் எல்லோரும் அங்கே போய், அங்கே பற்றாக்குறையை ஏற்படுத்தி, அவர்களைக் கஷ்டப்படுத்தி, மக்களுடைய பணமும் போய் இந்த மாதிரி நிலைமை வேண்டாம் என்பதற்காகத்தான் நாங்கள் ஊட்டிக்குப் போகவேண்டாம் என்று சொல்லுகிறோமே தவிர, ஊட்டிக்குப் போகவேண்டாம் என்று சொல்வது ஊட்டியிலே இருக்கும் மக்கள் வாழக் கூடாது என்பதற்காக அல்ல என்பதை இந்த மன்றத்தில் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இதே மாதிரிதான் என்.ஜி. ஓ.க்களுடைய பிரச்னையும். அவர்களுக்கு ஐந்து ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். மேலும் மேலும் போராடப் போராட கொஞ்சங் கொஞ்சமாக உயர்வதைவிட—நான் இந்த ஆட்சியினருக்குச் சொல்கிறேன்.—இந்த நாட்டிலே இருக்கும் எந்த ஊழியர்களாக இருந்தாலும் சரி, ஒரே மாதிரியான வேலை செய்பவர்களுக்கு ஒரே மாதிரியான சம்பள விகிதம் இருக்கும்படியான நிலைமையை உண்டாக்க நாம் முயற்சிக்கவேண்டும். அதிலேயும் வடக்கு உயர்ந்தும், தெற்கு தாழ்ந்தும் இருக்கக்கூடிய நிலைமை ஏற்படவேண்டாம். மத்திய சர்க்காரில் வேலை

செய்பவர்களுக்கு உயர்ந்த சம்பள விகிதமும், தெற்கே இருப்பவர்களுக்கு உயர்வு இல்லை என்ற நிலைமையும் வேண்டியதில்லை. பணம் இல்லை என்று நிதி அமைச்சர் கையை விரிக்கிறார். வட நாட்டுக்கு இங்கேயிருந்து மான்யமாகப் போகும் வருமான வரியை நிறுத்துங்கள், வேண்டாம் என்று சொல்லவில்லை, கையாளுங்களேன். அதே மாதிரி, தபால் வரி, ரயில்வே வரி போன்ற இந்தப் பணத்திலிருந்து இவைகளுக்கு உபயோகப்படுத்திவிட்டு, இது போக மீதத்தைத்தான் அவர்களுக்குத் தருவோம் என்று சொல்லுங்கள். ராஜகோபாலாச்சாரி சொல்லவில்லையா? "நான் சொல்கிறபோது நீங்கள் இந்தியைப் புகுத்துவதை நிறுத்தாவிட்டால் இந்த நாட்டிலே அண்ணாத்துரை ஜெயித்துவிடுவார்" என்று சொன்னார்கள். நீங்களும் சொல்லுங்கள் "நாங்கள் சொல்கிறபடி நீங்கள் செய்யாவிட்டால், திராவிட நாடு கட்டாயம் பிரிந்து போகும், ஆகையால் நாங்கள் சொல்கிறபடி செய்யுங்கள்" என்று வட நாட்டாரிடம் சொன்னால், அவர்கள் மாட்டோம் என்றா சொல்லிவிடுவார்கள்? அதைத்தான் ராஜா முத்தையா செட்டியார் அவர்களும் சுட்டிக்காட்டினார்கள். செட்டிநாட்டு ராஜாவின் புத்திமதியைக் கேட்டு நீங்கள் நடக்கும்படியாக நாங்கள் அனைவரும் பணிவன்போடு கேட்டுக்கொள்ளுகிறோம். அந்த அளவுக்குத்தான் நாங்கள் இந்த கவர்னர் உரையை வரவேற்பதற்கில்லையே தவிர வேறு ஒன்றுமில்லை. மக்களுடைய நலனைப் பொறுத்தவரையில், எந்த எந்தக் காரியங்களை இந்த அரசாங்கம் செய்ய முன்வந்தாலும் சரி, நாங்கள் அதை ஆதரிக்கவே தயாராய் இருக்கிறோம். அம்மாதிரி எந்தத் தீர்மானத்தையும் சட்ட ரூபமாகக் கொண்டுவருகிறபோது நாங்கள் எங்களுடைய ஆதரவைத் தரத் தயாராகவே இருக்கிறோம். இவைகளையெல்லாம் நாங்கள் 'நல்லது' என்று பட்டு, ஒத்துக்கொள்ளுகிறபோது, காங்கிரஸ்காரர்களுக்குத்தான் அம்மாதிரி மனப்பான்மை இல்லையே தவிர, நாங்கள் எத்தனையோ தடவை இந்த மன்றத்தில் சொல்லியிருக்கிறோம், இந்த நாட்டைப் பொறுத்த வரையில் இன்னும் பல சட்டங்கள் கொண்டு வரப்பட வேண்டும் என்று. உதாரணமாகச் சொல்லவேண்டுமானால், சுயமரியாதைக் கல்யாணங்கள் செல்லுபடி ஆகவேண்டும் என்று பல தடவை புள்ளி விவரங்களைச் சொல்லியிருக்கிறோம். அதற்கு என்று திருத்தம் ஆட்சியாளர்கள் கொண்டுவரவேண்டுமென்று கேட்டிருக்கிறோம். அந்த ஒரு திருத்தமாவது இந்த மன்றதில் கொண்டுவருவதற்கான குறிப்பு கவர்னர் உரையிலே சேர்க்கப்படவில்லை.

அதுமாதிரி, இந்த நாட்டைப் பொறுத்த வரையில், இந்த நாட்டினுடைய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருப்பது ஜாதிகள் என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அதை ஒழிப்பதற்கு என்று அகில இந்திய ரீதியிலே சட்டம் வரவேண்டுமென்று சொல்லிக்கொண்டே தட்டிக் கழிக்கப்பட்டு வருகிறதே தவிர, அதற்கு என்று சட்டத்தைக் கொண்டுவருவதற்கு இந்தச் சர்க்காரிலே இடம் இல்லை. இம்மாதிரியான ஒவ்வொரு திருத்தம் எல்லாம் கொண்டுவரப்பட்டு நிறைவேற்றப்படவேண்டும் என்பதுதான் எங்களுடைய குறிக்கோளே தவிர, நாங்கள் எந்தக் காரியத்திற்கும் இடைஞ்சலாக இருக்கவேண்டும் என்பது அல்ல. எந்தக் காரியத்திற்காவது இதுவரை இடைஞ்சலாக இருந்திருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் சொல்லட்டும். அவர்கள் சொன்னால் நாங்கள் அதற்குப் பதில் சொல்லத்தயாராய் இருக்கிறோம்.

அந்த மாதிரிதான் ஆட்சி மொழி விஷயத்தில் நாங்கள் ஆரம்பக் காலத்திலிருந்து சொன்ன கருத்திலேயே இருக்கிறோம். அமைச்சர் அவர்கள் வேறு விஷயமாகப் பேசி, கடைசியில் ஒரு உடன்பாட்டுக்கு வந்தார்கள். இந்த மன்றத்தில் கவர்னர் அவர்களுடைய உரையைப் பார்க்கும் போது ஒரு முக்கியமான விஷயம் இடம் பெற்றிருக்கவேண்டும். அது மிக மிக முக்கியமான விஷயம். ரேடியோ என்று சொல்லக்கூடிய வானொலிக்கு "ஆகாஷ்வாணி" என்று மொத்தத்திலே கொடுத்திருக்கிறார்கள். ஆகாஷ்வாணி என்னும் பெயர் வேண்டாம், நம்முடைய வானொலி என்னும் பெயரே இருக்கட்டும் என்று இந்த நாட்டிலே இருக்கிறவர்கள் கிளர்ச்சி ஆரம்பித்து, அதிலே ஒருவர் உண்ணாவிரதம் இருந்து சாகக்கூடிய நிலைமையிலே இருந்துகொண்டிருக்கிறார். அதைக்

